# பன்னிரு பாட்டியல்

## வினா - விடை



ஆக்கியோன் :

தா. ம. வெள்ளைவாரணம்



**மோகன் பதிப்பகம்,**
4, பைகிராப்ட்ஸ் சாலை, திருவல்லிக்கேணி,
சென்னை-600 005.

விலை : ரூ. 3-00

உ

சிவ சிவ

# பன்னிரு பாட்டியல்

## வினா விடை

ஆக்கியோன் :

மதுரகவி

திருமுறைச்செம்மல், வித்துவான்

**தா. ம. வெள்ளைவாரணம்**

தமிழ்ப் பேராசிரியர், செந்தமிழ்க்கல்லூரி, திருப்பனந்தாள்

வெளியீடு :

**மோகன் பதிப்பகம்**

சென்னை-600 005

௳

மதுரைக்கலம்பகம்

குண்டுநீர்ப் பட்டத் தொண்டுறைச் சங்கமும்
வண்டமிழ்க் கடலின் றண்டுறைச் சங்கமும்
முத்தகம் பயின்று காவியங் கற்றுச்
சித்திரப் பாட்டியல் தேர்ந்தன செல்லும்
தடம்பணை யுடுத்த தண்டமிழ்க் கூடல்
இடங்கொண் டிருந்த இமையா முக்கண்
கருமிடற்று ஒருவ! நின் திருவடி வழுத்துதும்.

—ஸ்ரீ குமர குருபர சுவாமிகள்

அன்னை அச்சகம், சென்னை-600 024. (போன் 424414)

# முன்னுரை

தமிழன்பர்களே ! மாணவர்களே !

நான் கல்லூரியில் முப்பத்தொரு ஆண்டுகளாகப் பாடம் சொல்லிய பழக்க அறிவினைக் கொண்டும் மாணவர்களின் நடைமுறையை நன்கு அறிந்தும் வினாவிற்கேற்ப விடையளிக்கும் திறம் மாணவர்களுக்குப் பெருக வேண்டும் என்னும் நோக்கத்துடன்,

புலவர், பி.லிட்., எம். ஏ. தேர்வுக்குரிய

தொல்-எழுத்து. இளம்பூரணம்

தொல்-எழுத்து. நச்சினார்க்கினியம்

தொல். சூத்திர விருத்தி

தொல். சொல். சேனாவரையம்

தொல். பொருள் இளம்பூரணம்

தொல், பொருள். பேராசிரியம்

நன்னூல்—விருத்தி

நன்னூல்—காண்டிகை

அகப் பொருள் விளக்கம்

புறப்பொருள் வெண்பாமாலை

யாப்பருங்கலக் காரிகை

தண்டியலங்காரம்

மாறனலங்காரம்

வண்ணத்தியல்பு

கல்வெட்டும் கல்வெட்டியலும்

கோயிற் கலை

என்னும் வினாவிடைகளை வெளியிட்டுள்ளேன். இப்போது மன்னிரு பாட்டியல் என்னும் இவ்வினாவிடை இரண்டாம் பதிப்பாக வெளிவருகிறது.

மாணவர்கள் இவ்வினாவிடை நூலைக் கற்றறிவதோடு பிற வினாவிடைகளையும் கற்றறியக் கடமைப் பட்டவர்கள் ஆவார்கள்..

இந்நூலை வெளியிடும் உரிமையை மோகன் பதிப்பகத்தார்க்கு வழங்கியுள்ளேன். இதேபோல் என்னுடைய வினா விடைகள் பிறவும் மோகன் பதிப்பகத்தார் வாயிலாகத் தொடர்ந்து வெளிவரும். இங்ஙனம் மோகன் பதிப்பகத்தார் வாயிலாக வெளிவரும் என்னுடைய வினா விடைகளை வழக்கம் போல் வாங்கி ஆதரிக்கும்படித் தமிழன்பர்களையும் மாணவர்களையும் கேட்டுக் கொள்கிறேன்.

திருப்பனந்தாள்
15—12—1982

இங்ஙனம்
தா. ம. வெள்ளைவாரணம்

உ

சிவ சிவ

# பன்னிரு பாட்டியல்

## வினா விடை

### 1. பாட்டியல் நூல்களைப் பற்றிக் குறிப்பு வரைக

பாட்டியல் என்பது பிரபந்தங்களின் அமைப்புப் பற்றிய இலக்கணத்தைக் கூறும் நூலாகும். பாட்டு என்பது ஈண்டுச் செய்யுளை உணர்த்தாமல் செய்யுட்களால் ஆகிய நூல்களை உணர்த்தும்: இயல் என்பது இலக்கணம். (பிரபந்தம், சிற்றிலக்கியம், இனம் என்பன ஒரு பொருட் சொற்கள்.)

"பிரபந்தங்கள் 96" என்று கூறுகிற வழக்கம் கி. பி 17-ம் நூற்றாண்டில் இயற்றப்பட்ட 'சிவந்தெழுந்த பல்லவ ராயன்" உலாவில்தான் முதன் முதலாகக் குறிக்கப்படுகிறது. பிரபந்த இலக்கணம் கூறும் எந்தப் பாட்டியலிலும் "பிரபந்தம் 96' என்ற வரையறை கூறப்படவில்லை. மற்றும் 96க்குக் குறைவான பிரபந்த இலக்கணமே கூறப்பட்டுள்ளன. எல்லாப் பாட்டியல்களிலும் கூறப்பட்டனவும் கூறப்படாமல் விடுபட்டு இன்று வழங்குவனவுமாகிய பிரபந்தங்களை எண்ணினால் எண்ணிக்கை நூற்றுக்குமேல் போய் விடுகிறது.

தமிழில் பாட்டியல் நூல்கள் பல இயற்றப்பட்டன. அவற்றுள் அகத்தியர் பாட்டியல், பரணர் பாட்டியல் முதலியன தற்போது கிடைக்கவில்லை, பன்னிரு பாட்டியல், வெண்பாப் பாட்டியல், நவநீதப் பாட்டியல், வரையறுத்த பாட்டியல், சிதம்பரப் பாட்டியல், இலக்கண விளக்கப் பாட்டியல் என்பன மட்டும் கிடைத்துள்ளன,

பன்னிரு பாட்டியல்: இது யாரால் செய்யப்பட்டதெனத் தெரியவில்லை. ஒரு சிலர் பன்னிரு புலவர்களால் செய்யப்பட்டதெனக் கூறுகின்றனர். இந்நூல் எழுத்தியல்.

சொல்லியல், இனவியல் என மூன்று இயல்களை உடையது. 231 நூற்பாக்களால் ஆக்கப் பெற்றது. 74 பிரபந்தங்களின் இலக்கணத்தைக் கூறுவது. இதன் காலம் 12-நூற்றாண்டு.

வெண்பாப் பாட்டியல்: இதற்கு வச்சணந்தி மாலை என்ற வேறு பெயரும் உண்டு, இது குண வீர பண்டிதர் என்பவரால் செய்யப்பட்டது. முதன் மொழியியல், செய்யுளியல், பொதுவியல் என மூன்று இயல்களை உடையது. 101 வெண்பாக்களால் ஆக்கப் பெற்றது. 63 பிரபந்தங்களின் இலக்கணத்தைக் கூறுவது. இதன் காலம் 13-ம் நூற்றாண்டு.

நவநீதப்பாட்டியல்: இது நவநீத நடர் என்பவரால் செய்யப்பட்டது. பொருத்தவியல், செய்யுள் மொழியியல், பொதுமொழியியல் என மூன்று இயல்களை உடையது. 108 கட்டளைக் கலித்துறைகளால் ஆக்கப் பெற்றது. 63 பிரபந்தங்களின் இலக்கணத்தைக் கூறுவது. இதன் காலம் 14-ம் நூற்றாண்டு. இந்நூலுக்கு இரண்டு பழைய உரைகள் உள்ளன.

வரையறுத்த பாட்டியல் இது சம்பந்த முனிவரின் மாணவரால் செய்யப்பட்டது அவரது பெயர் தெரியவில்லை. 10 கட்டளைக் கலித்துறைகளால் ஆக்கப்பெற்றது. மங்கலச் சொற் பொருத்தம் மட்டுமே கூறப்பட்டிருக்கிறது; பிரபந்தங்களின் இலக்கணம் கூறப்படவில்லை எனவே இந் நூல் முற்றும் கிடைக்கவில்லை எனத் தெரிகிறது. இதன் காலம் 14-ம் நூற்றாண்டு.

சிதம்பரப் பாட்டியல்: இது சிதம்பர புராணம் எழுதிய பரஞ்சோதி முனிவரால் செய்யப்பட்டது. பொருத்தவியல், மரபியல் என இரண்டு இயல்களை உடையது. 31 ஆசிரிய விருத்தங்களால் ஆக்கப் பெற்றது. 69 பிரபந்தங்களின் இலக்கணத்தைக் கூறுவது. இதன் காலம் 16-ம் நூற்றாண்டு.

இலக்கண விளக்கப் பாட்டியல்: இது வைத்தி நாத தேசிகரால் செய்யப்பட்டது. இலக்கண விளக்கம் என்னும் நூலின் இறுதி இயலாக அமைந்திருப்பது. 181 நூற்பாக்களால் ஆக்கப் பெற்றது, 77 பிரபந்தங்களின் இலக்கணத்தைக் கூறுவது. இதன் காலம் 17-ம் நூற்றாண்டு. நூலாசிரியராலேயே உரையும் செய்யப்பட்டிருக்கிறது.

2. பன்னிரு பாட்டியலின் ஆசிரியர், நூலமைப்பு, பெயர்க்காரணம், காலம் என்பன பற்றி எழுதுக.

பன்னிரு பாட்டியலின் ஆசிரியர் இன்னார் எனத் தெரியவில்லை. அகத்தியரின் மாணாக்கர் பன்னிருவர் கூடிப்பன்னிரு படலத்தைச் செய்தது போல இந்திரகாளியர், பரணர் முதலிய பன்னிரு புலவர்கள் கூடி இந்நூலைச் செய்தனர் என்று சிலர் கூறுவர், இக்கருத்துப் பொருந்தாது, ஏன்எனில் இந்நூலில் மேற்கோளாகக் காட்டிய நூற்பாக்களை எழுதியவர்கள் இந்திர காளியர் முதலாகப் பதின் மூவர் உள்ளனர். மேலும் நூலின் நூற்பாக்கள் வேறாகவும் மேற்கோள் நூற்பாக்கள் வேறாகவும் உள்ளன. மற்றும் 10-ம் நூற்றாண்டில் எழுந்த மெய்க்கீர்த்திக்கு இலக்கணம் கூறப்பட்டிருக்கிறது. எனவே சங்க காலப் புலவர்களாகிய இந்திர காளியர், பரணர் முதலியோர் இந்நூலின் ஆசிரியர்களாக இருக்க இயலாது.

நூலமைப்பு: இந்நூல் எழுத்தியல், சொல்லியல், இனவியல் என மூன்று இயல்களை உடையது. 231 நூற்பாக்களால் ஆக்கம் பெற்றது. எழுத்தியலில் எழுத்தின் பிறப்பு, வருணப் பொருத்தம், கதிப்பொருத்தம், உண்டிப் பொருத்தம், பால் பொருத்தம், தானப்பொருத்தம், கன்னல் பொருத்தம், புள் பொருத்தம், நாள் பொருத்தம் என்ற ஒன்பது செய்திகள் கூறப்பட்டுள்ளன. சொல்லியலில் சீர்க் கணப் பொருத்தம், மங்களப்பொருத்தம், பெயர்ப் பொருத்தம் என்ற மூன்று செய்திகள் கூறப்பட்டுள்ளன. இனவியலில் 61 இனங்களுக்கு இலக்கணம் கூறப்பட்டுள்ளன. இனி விருத்த வகையில் 9 இனமும், அந்தாதித் தொகையில் 2 இனமும், மருட்பாவில்

3 இனமும். பூணே முலை நயனம் என்பதில் 2 இன மும், கணக்கு என்பதில் 2 இனமும் அடக்கிக் கூறப்பட்டிருப் பதால் அவற்றை விரித்துக் கூட்டினுல் மொத்தம் 74 இனங் களுக்கு இலக்கணம் கூறப்பட்டிருப்பதை அறியலாம்.

பெயர்க்காரணம் : இந்நூலில் எழுத்தியலில் 9 செய்தி யும் சொல்லியலில் 3 செய்தியும் ஆகப்பன்னிரண்டு செய்தி கள் கூறப்பட்டிருப்பதால் இதற்குப் பன்னிருப் பாட்டியல் எனப்பெயர் வந்தது என்பர் சிலர். பன்னிரு புலவர்களால் இயற்றப்பட்டதால் அப்பெயர் வந்தது என்பர் சிலர்.

காலம் : இந்நூலில் சாதகம் என்ற இனத்தின் இலக் கணம் கூறும் போது சகாத்தம் குறிக்க வேண்டும் என்று கூறப்பட்டிருக்கிறது. சகாத்தம் என்பது கி.பி. 78ல் தொடங் கியது. எனவே இந்நூல் கி. பி 78 க்குப் பிற்பட்டது என்பது தெரிகிறது. மற்றும் இந்நூலில் தாண்டகம் என்ற இனம் பேசப்படுகிறது. தாண்டகம் என்ற இனம் கி பி. 7 ம் நூற் ருண்டில் திருநாவுக்கரசரால் தான் முதன் முதலில் இயற்றப் பெற்றது. எனவே இந்நூல் கி.பி. 7 ம் நூற்ருண்டுக்குப் பிற் பட்டது எனத்தெரிகிறது. மேலும் இந்நூலில் மெய்க்கீர்த் திக்கு இலக்கணம் கூறப்பட்டிருக்கிறது. மெய்க்கீர்த்தி வரையும் வழக்கத்தைக் கி. பி. 10 ம் நூற்ருண்டில் முதலாம் இராசராச சோழன்தான் முதன் முதலில் தோற்றுவித்தான். எனவே இந்நூல் கி.பி. 10 ம் நூற்ருண்டுக்குப் பிற்பட்டது எனத்தெரிகிறது. எனவே இந்நூல் ஏறத்தாழ 12 ம் நூற் ருண்டில் செய்யப்பட்டிருக்க வேண்டும் எனக்கொள்ளலாம்.

3 பா இனங்கள் எவை? அவை பற்றிப் பாட்டியல் கூறுவது யாது ? (80 Sep)

வெண்பா, அகவல், கலிப்பா; வஞ்சிப்பா, மருட்பா, தாழிசை, துறை, விருத்தம் என்பவற்ருல் ஆக்கப் பெற்றுப் பல இனங்களாக விரிந்த பிரபந்த நூல்களே இனங்கள் எனப் படும். இந்த இனம் ஒன்றேயாகியது, ஒன்று பலவாகியது பலவொன்ருகியது என மூன்று வகைப்படும்.

ஓரே ஒரு பாட்டால் செய்யப்பெற்ற நூல் ஒன்றேயாகிய இனமாகும் ஏடுத்துக்காட்டு : உலா, ஆற்றுப்படை, மடல் மெய்கீர்த்தி, பாதாதி முதலியன.

ஓரே புலவரால் ஒரே வகையான பல பாடல்களால் செய்யப் பெற்ற நூல் ஒன்று பலவாகிய இனமாகும்.

எ-டு! அந்தாதி, கோவை, காப்பியம் (மணிமேகலைக் காப்பியம் ஆசிரியம் என்னும் ஒரே வகையாலான பல பாக்களைக் கொண்டது) மற்றும் பிள்ளைக்கவி பரணி, ஒருபா ஒருபஃது முதலியன.

பலவொன்றாகிய இனம் இரண்டு வகைப்படும்: அவற்றுள் ஒன்று, "பல புலவரால் பாடப் பெற்ற ஒரே வகையான பாடல்களால் தொகுக்கப்பட்டது" (எ-க) கலித்தொகை, குறுந்தொகை, நெடுந்தொகை, நற்றிணை, பரிபாடல் முதலியன; மற்றொன்று, "ஒரே புலவரால் பல வகையான பாடல்களால் செய்யப்பட்டது" (எ-டு) கலம்பகம், இரட்டைமணி மாலை, இருபா இருபஃது, மும்மணிக் கோவை, நான்மணி மாலை முதலியன,

பன்னிரு பாட்டியல் பாஇனம் என்று குறிப்பன வருமாறு !

1. சாதகம் 2 பிள்ளைப்பாட்டு 3. குடைமங்கலம் 4. ஒரு போகு 5. கலம்பகம் 6. உலா 7. சின்னப்பூ 8. பரணி 9. மடல் 10. மறம் 11. பல்சந்தமாலை 12. இணைமணிமாலை 13. இரட்டைமணிமாலை 14. மும்மணி மாலை 15. நான்மணிமாலை 16. கலம்பகமாலை 17. மும்மணிக் கோவை 18. கலியந்தாதி 19. ஒலியந்தாதி 20. யானைத்தொழில் 21. வருக்கமாலை 22. நாம மாலை 23. இன்னிசைத்தொகை 24. சிலைவிருத்தம் 25. பரிவிருத்தம் 26. கரிவிருத்தம் 27. வாள்விருத்தம் 28. குடைவிருத்தம் 29. வேல்விருத்தம் 30. செங்கோல்விருத்தம் 31. நாட்டு விருத்தம் 32. ஊர்விருத்தம் 33. ஐம்படைவிருத்தம் 34.

நாழிகைக்கவி 35. நவமணிமாலை 36. கைக்கிளை 37. அரிபிறப்பு 38. அட்டமங்கலம் 39. இல்லறவெள்ளை 40. மங்கலவெள்ளை 41. தாரகை மாலை 42. செந்தமிழ் மாலை 43. தாண்டகம் 44. பதிகம் 45. மெய்க் கீர்த்தி 46. செருக்களவழி 47. மறக்கள வஞ்சி 48. செருக்களவஞ்சி 49. ஆற்றுப்படை 50. கண்படைநிலை 51. துயிலெடை நிலை 52. விளக்குநிலை 53. கடா நிலை 54. யாண்டுநிலை 55. பறை நிலை 56-57 அந்தாதித்தொகை (1. வெண்பா அந்தாதி, 2. கலித்துறை அந்தாதி.) 58—60 மருட்பா (1. புறநிலை வாழ்த்து, 2. வாயுறை வாழ்த்து, 3. செவியறிவுறூஉ) 61. பாதாதி 62. பணைமுலைப்பத்து 63. நயனப்பத்து 64. உழத்திப்பாட்டு 65. குறத்திப்பாட்டு 66. ஒருபா ஒருபஃது 67. இருபா இருபஃது 68. கோவை 69—70 கணக்கு (1. மேற்கணக்கு, 2. கீழ்க் கணக்கு) 71. தொடர்நிலைச் செய்யுள் 72. பாட்டு 73. கடைநிலை 74. கையறுநிலை.

4. பாட்டியல் கூறும் பாப் பொருத்தம் பற்றி நீவிர் அறிவன யாவை ? (80 Apl)

ஒவ்வொரு பாவுக்கும் உரிய சாதி, கடவுள், நாள், ஓரை, விரை, பூ, வண்ணம், நிலம் என்ற எட்டும் இன்னின்னவை என்று கூறுவது பாப்பொருத்தம் ஆகும்.

வெண்பாவுக்கு உரிய பொருத்தம்

| | | |
|---|---|---|
| சாதி | — | அந்தணர் |
| கடவுள் | — | சந்திரன், வியாழன் |
| நாள் | — | கார்த்திகை முதல் ஏழு விண்மீன் |
| ஓரை | — | மிதுனம், கடகம், விருச்சிகம் |
| விரை | — | சந்தனம் |
| பூ | — | மல்லிகை |
| வண்ணம் | — | வெண்மை |
| நிலம் | — | முல்லை நிலம் |

## அகவற்பாவுக்கு உரிய பொருத்தம்

| | | |
|---|---|---|
| சாதி | — | அரசர் |
| கடவுள் | — | சூரியன், செவ்வாய் |
| நாள் | — | மகம் முதல் ஏழு விண்மீன் |
| ஓரை | — | சிம்மம், தனுசு, மேஷம் |
| விரை | — | செஞ்சந்தனம் |
| பூ | — | செங்கழுநீர் |
| வண்ணம் | — | செம்மை |
| நிலம் | — | குறிஞ்சி நிலம் |

## கலிப்பாவுக்கு உரிய பொருத்தம்

| | | |
|---|---|---|
| சாதி | — | வணிகர் |
| கடவுள் | — | சனி, புதன் |
| நாள் | — | அனுஷம் முதல் ஆறு விண்மீன் |
| ஓரை | — | துலாம், கும்பம், மிதுனம் |
| விரை | — | சந்தனம் |
| பூ | — | சண்பகம் |
| வண்ணம் | — | பொன்மை |
| நிலம் | — | நெய்தல் நிலம் |

## வஞ்சிப்பாவுக்கு உரிய பொருத்தம்

| | | |
|---|---|---|
| சாதி | — | வேளாளர் |
| கடவுள் | — | சுக்கிரன் |
| நாள் | — | அவிட்டம் முதல் ஏழு விண் மீன் |
| ஓரை | — | ரிஷபம். கன்னி, மகரம் |
| விரை | — | கலவைச்சாந்து |
| பூ | — | நீலப்பூ |
| வண்ணம் | — | நீலநிறம் (கருமை) |
| நிலம் | — | மருதநிலம் |

குறிப்பு : 1 மருட்பாவுக்குச் சாதி இல்லை. 2. அவ்வச் சாதி யார்க்கு அவ்வச்சாதிப் பாக்களால் பாடுவதே சிறப்

பாகும். ஆயினும் புலவர்கள் ஒரு சாதியார்க்கு வேறு சாதிப் பாக்களால் பாடினுராயினும் ஏற்றுக் கொள்ளப் படும். வெண்பா, ஆகவல், கலி, வஞ்சி, விருத்தம் என்ற ஐந்தும் மங்கலப் பொருளில் பாடுதற்கு உரியனவாகும்.

5. பாட்டியல் உணர்த்தும் பாப்பொருத்தம் அல்லது பா இனங்கள் பற்றிக் கூறுக. (81 Apl)

விடை: 3, 4-ல் காண்க

9. பிள்ளைப் பாட்டின் இலக்கணம் பற்றிக் கட்டுரை வரைக. (80 Apl)

## பிள்ளைப் பாட்டு

முன்னுரை: பிள்ளைப் பாட்டு என்பது பிள்ளைத் தமிழ், பிள்ளைக் கவி என்ற வேறு பெயராலும் கூறப்படும். இது இறைவன் இறைவி தேவர்கள் மன்னர்கள் வள்ளல்கள் சான்றோர்கள் முதலாயினேருள் ஒருவரைக் குழந்தையாகக் கற்பித்துக் கொண்டு பாடப் பெறும் இனமாகும். இது ஆண்பால் பிள்ளைத்தமிழ், பெண்பால் பிள்ளைத்தமிழ் என்று இரண்டு வகைப்படும். (எ.டு) 1. திருமலை முருகன் பிள்ளைத் தமிழ் 2. மதுரை மீனுட்சியம்மை பிள்ளைத் தமிழ்.

## ஆண்பால் பிள்ளைத் தமிழ்

கால எல்லை: மூன்றும் மாதம் முதல் இருபத்தோராம் மாதம் வரையான ஒற்றைப் படை மாதங்களில் அதாவது 3, 5, 7, 9, 11, 13. 15, 17, 19. 21-ம் மாதங்களில் முறையே காப்பு முதலிய பத்துப் பருவங்களை அமைத்துப் பாட வேண்டும் என்று பன்னிரு பாட்டியல் கூறுகிறது. இனி ஒன்று முதல் ஐந்தாண்டளவாக—அதாவது பிறப்பு முதல் ஆறு ஆறு மாதங்களாகக் கூட்டிப் பத்துப் பருவமும் பாடலாம் என்கிறுர் பொய்கையார். ஆண்பாலைப் பிறப்பு முதல் 16 ஆண்டு வரை வைத்துப்பாடலாம் என்று இந்த்ர காளியாரும்

அரசன் முடிசூடிய பின்னர் பிள்ளைப் பாடலாகாது என்று பரணரும் கூறுகின்றனர்.

பருவம் : ஆண்பாலுக்குக் காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வருகை, அம்புலி, சிற்றில், சிறுபறை. சிறுதேர் என்னும் பத்துப் பருவங்கள் பாட வேண்டும் என்று பன்னிரு·பாட்டியல் கூறுகிறது. இப்பருவங்களோடு அச்சோ அச்சோ, புறம்புல்கு, அப்பூச்சி முலையுணாய், நீராடவாராய் குழல் வாராய், கோல்கொண்டு வா, பூச்சூட்டவாராய், காப்பிடவாராய், இன்று முற்றும் என்ற பருவங்களையும் அமைத்துப் பெரியாழ்வார் பாடியுள்ளார்.

காப்புப் பருவம் திருமால் சிவன், நான்முகன் பிள்ளையார், முருகன், சூரியன், பைரவர், சப்தமாதர், இந்திரன், சாத்தன், குபேரன், காளி முப்பத்து முக்கோடி தேவர், திருமகள், நாமகள், சந்திரன் முதலிய தெய்வங்களுள் பதினொரு பேரைக் காப்புக்குரிய தெய்வங்களாக வைத்து பதினொரு பாடல் பாட வேண்டும் காப்பின் முதற் செய்யுளைத் திருமாலுக்கு உரியதாக அமைக்க வேண்டும். திருமால் காத்தற் கடவுள் ஆகலானும், திருமகளோடு கூடியிருப்பவனாகலானும், முடிகடகம், தார் குழை நூல், மணிப்பூண் ஆகியவற்றை அணிபவனாகலானும் திருமாலே முன்னுற மொழிதலுக்கு உரியவனாவான். சிவனையும் எழுமாதரையும் காளி முதலியோரையும் காப்புக்குக் கூறுமிடத்து அவரது கொலைத் தொழிலையும் கொடுமைப் பாட்டையும் கூறாமல் அவரது பெயரும் அடையாளங்களும் மட்டுமே கூறல் வேண்டும்.

அம்புலிப் பருவம் ! அம்புலியை அழைக்கும் போது சாம தான பேத தண்டம் என்ற நான்கு உபாயங்கள் அமையுமாறு பாடவேண்டும்.

பாடல் அமைப்பு ! பிள்ளைத்தமிழை ஆசிரிய விருத்தம், வண்ணப்பாடல் (சந்த விருத்தம்), கலி விருத்தம் என்பவற்றால் பாட வேண்டும் என்று பன்னிரு பாட்டியல்

கூறுகிறது. சிலர் நெடுவெண் பாட்டாக (பஃறொடை வெண்பாவாக)ப் பாட வேண்டும் என்று கூறுவர். காப்புப் பருவத்தைத் 9 அல்லது 11 பாடல்களாலும் மற்ற பருவங்களைப் பத்துப் பத்துப் பாடல்களாலும் பாட வேண்டும்.

உவமைகள்: ஆண்மகனுக்கு 12 ஆண்டு நிகழும் பருவத்தில் கதிரிளம்பிறை. புலிப்பறழ் குஞ்சரக்குழவி, கோளரிக் குருளை, அடல்இளவிடை என்ற உவமைகள் கூறத்தகும்.

## *பெண்பால் பிள்ளைத் தமிழ்*

கால எல்லை; மூன்றும் மாதம் முதல் இருபத் தோராம் மாதம் வரையான ஒற்றைப்படை மாதங்களில் முறையே காப்பு முதலிய பருவங்களைப்பாட வேண்டும் என்று பன்னிரு பாட்டியல் கூறுகிறது. இனிப் பிறப்பு முதல் ஆறு ஆறு மாதங்களாகக் கூட்டி ஐந்தாண்டு அளவாகப்பத்துப் பருவமும் பாடலாம் என்கிறார் பொய்கையார்.

பருவம்: ஆண்பாலுக்குக் கூறிய பத்துப் பருவங்களில் ஈற்றில் சொன்ன சிற்றில் சிறுபறை சிறுதேர் என்ற மூன்றையும் பெண்பாலுக்கு நீக்கிவிட்டுச் சிற்றிலிழைத்தல், சிறு சோறுக்கல், குழமகன், ஊசல், 12-ம் வயதில் நோக்கும் காமன் நோன்பு என்ற பருவங்களைச் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்று பன்னிரு பாட்டியல் கூறுகிறது. இனி ஆண்பாலுக்குரிய சிற்றில் முதலிய மூன்றையும் நீக்கி விட்டுப் பெண்பாற்குக் கழங்கு அம்மானை ஊசல் என்ற பருவங்களைச் சேர்க்க வேண்டும் என்று இலக்கண விளக்கப் பாட்டியல் கூறுகிறது ஆனல் ஒருசில புலவர்கள் அம்மானை, நீராடல், ஊசல் என்ற பருவங்களை அமைத்தும் பாடியுள்ளனர்.

காப்புப் பருவம், அம்புலிப் பருவம், பாடலமைப்பு என்ற தலைப்புக்களை ஆண்பாற்பிள்ளைத் தமிழுக்குக் கூறியவாறே கொள்க.

உவமைகள் : பெண்களுக்கு மான்கன்று, மயிற்பிள்ளை, தேனின் தேறல், கரும்பின் இளமுளை, கல்லாக்கிள்ளை, இளந் தளிர் வல்லி முதலிய உவமைகள் கூறத்தகும்.

முடிவுரை : பிள்ளைப்பாட்டுக்கு மேற்கண்ட இலக்கணம் கூறப்பட்டிருப்பினும் கவிஞர்கள் சிற்சில மாற்றங்களும் செய்து பாடியுள்ளனர். அரசன் முடிசூடியபின் பிள்ளைத் தமிழ் பாடலாகாது என்ற விதியை மீறிக் குலோத்துங்கச் சோழன் பிள்ளைத்தமிழ் அவன் முடிசூடியபின், பாடப் பட்டுள்ளது. பெரியாழ்வார் கலித்தாழிசைகளால் பாடியுள் ளார். பருவத்துக்குப் பத்துப்பாடல் என்ற வரையறை மீறப்பட்டு ஒவ்வொருபாடல், மும் மூன்றுபாடல், ஐவைந்து பாடல் எனவும் பாடப்பட்டுள்ளன. அம்புலிப் பருவத்தில் சாமதான பேததண்டம் அமைத்துப் பாட வேண்டி இருப்ப தால் "பிள்ளைத் தமிழுக்கு அம்புலி புலியாம்" என்ற வழக்கு ஏற்பட்டுள்ளது. சுருங்கச் சொன்னால் சிற்றிலக்கிய வரிசையில் பிள்ளைத் தமிழ் உயரிய இடம் வகிக்கிறது என்றே கூற வேண்டும்.

7. பிள்ளைப் பாட்டினை ஆண் பெண் இருபாலின் மேல் வைத்து விளக்கம் வரைக. (79 Sep,)

விடை : 6—னுள் காண்க.

8. சாதகம், குடைமங்கலம், ஒருபோகு என்பவற்றின் இலக்கணங்களை எழுதுக.

*சாதகம்*

சாதகம் என்பது ஒருவர் பிறந்த காலத்தை விவரிக்கும் பிரபந்தம் (இனம்) ஆகும். சாதகம்—பிறப்பு.

அதாவது ஒருமகவு தோன்றிய காலத்தைக் கலியுகத்தில் பொருந்திய ஆண்டின் எண்ணிக்கையும், அதனோடு ஒத்த சாலிவாகன சகம் ஆகிய ஆண்டின் எண்ணிக்கையும், பிரப வாதி ஆண்டில் இன்ன ஆண்டு என்பதும், ஞாயிறும்

(மாதமும்), பக்கமும், வாரமும் (கிழமையும்), எடுத்துரைத்து இன்னாருக்கு இன்ன மகவு பிறந்தது என்று கூறுவதாகும்.

## குடைமங்கலம்

குடைமங்கலம் என்பது ஒரு மன்னனின் வெண் கொற்றக் குடையினது நலத்தைப் பாராட்டும் பிரபந்த மாகும். இது பத்து நேரிசை வெண்பாக்களால் பாடப் பெறும். வெண்பாவின் முதலிரண்டடிகளில் குடையின் தொழிற் சிறப்பைக் கூறிப் பின் இரண்டடிகளில் குடையின் தனித் தன்மையை இரட்டிப்பாகப் புகழ்ந்து அரசனையும் புகழ்ந்து இன்ன அரசனின் குடை என்று முடிக்கவேண்டும். அதாவது வெண்பாவின் ஈற்றடியின் ஈற்றுச்சீர் குடை என்று அமைய வேண்டும் இதன் நேரிசை வெண்பாக்கள் ஈற்றடி ஒழிய ஏனைய மூன்றடிகளும் கட்டளை அடியாக— எழுத்தெண்ணிக்கையில் தம்முள் ஒத்தனவாக — அமைய வேண்டும். மற்றும் மோனை எதுகை என்ற இரு தொடைகள் பொருந்தியிருக்க வேண்டும்.

பத்து வெண்பாக்களிலும் முறையே குடைவருவதைச் சாற்றும் இன்னியம், வரும் வழியின் ஏற்புடைமை, குடையின் ஒப்பற்ற தனித்தன்மை, மிகுதிப்பாடு, சமம், உடன்பாடு, ஒற்றறிதல், தலைப்பாடு, பகைவர்க்குச் செய்யும் உபாதி, நண்பர்க்குச் செய்யும் கொடை என்ற பத்துப் பொருள்களை அமைத்துப் பாடவேண்டும்.

## ஒரு போகு (தேவபாணி)

ஒரு போகு என்பதற்குத் தேவபாணி என்ற வேறு பெயரும் உண்டு. இது முன்னிலையாகவேனும் படர்க்கை யாகவேனும் ஒரு போகு என்னும் செய்யுள் வகையால் கடவுளைப் பழிச்சுவதாக (பரவுவதாக)ப் பாடும் பிரபந்த மாகும்.

இது அம்போதரங்க ஒருபோகு, வண்ணக ஒரு போகு, கொச்சக ஒருபோகு என மூன்று வகைப்படும். தரவு,

தாழிசை, அராகம், அம்போதரங்கம், தனிச்சொல், சுரிதகம் என்னும் ஆறு உறுப்புக்களைக் கொண்ட கலிப்பாவில் அராகம் என்ற வண்ணகமின்றி வந்தால் அது அம்போதரங்க ஒரு போகு எனப்படும். அம்போதரங்கமின்றி வந்தால் வண்ணக ஒருபோகு எனப்படும். ஆறு உறுப்புக்களும் தம்மளவில் மிக்கும் குறைந்தும் மயங்கியும் வந்தால் கொச்சக ஒருபோகு எனப்படும்.

ஒரு போகு என்னும் தேவபாணி திருமால் பேரில் பாடப் பெறுவது பெருவழக்காகும். சிறுபான்மை சிவன்பேரிலும் முருகன் பேரிலும் பாடப் பெறுதலும் உண்டு. (எ—டு) சிவன் பேரில் நக்கீரர் பாடிய "பெருந்தேவபாணி" பதினோ ராம் திருமுறையில் சேர்க்கப்பட்டுள்ளது.

9. கலம்பக இலக்கணம் யாது ? (80 Apl

## கலம்பகம்

பல்வகைச் செய்யுட்களும் பதினெட்டு உறுப்புக்களும் தம்முள் கலந்து நிற்குமாறு செய்யும் பிரபந்தம் கலம்பகம் எனப்படும். பல்வகைப் பூக்களைக் கலந்து கட்டிய மாலை கதம்பம் (கலம்பகம்) எனப்படுவது போலப் பல்வகைச் செய் யுட்களையும் உறுப்புகளையும் கலந்து செய்த பிரபந்தம் கலம் பகம் எனப் பெயர் பெற்றது என்பர் சிலர். இனிக்கலம் என்றால் பன்னிரண்டு, பகம் என்றால் ஆறு ஆகப் பதினெட்டு உறுப்புக்களைப் பெற்று வருவதால் கலம்பகம் எனப் பெயர்ப் பெற்றது என்பர் சிலர்.

கலம்பகம் என்பது ஒரு போகு, வெண்பா, கட்டளைக் கலித்துறை என்ற மூன்று செய்யுட்களை முதற்கண் முறையே பெற்றிருக்க வேண்டும். அவற்றுக்குப் பின் புய வகுப்பு, அம்மானை, ஊசல், யமகம் (மடக்கு) களி, மறம், சித்துகாலம் மதங்கியார், வண்டுவிடு தூது, மேக விடு தூது, கைக்கிளை மருட்பா, சம்பிரதம், தவம் என்ற உறுப்புக்களை இடை

இடையே பெற்றிருக்க வேண்டும். வெண்டுறைவஞ்சித்துறை இன்னிசை வெண்பா, அகவற்பா, பல்வகை விருத்தங்கள் என்ற செய்யுள் வகைகளை இடை இடையே பெற்றிருக்க வேண்டும். இனிக் குறம் பாண் ஊர் தழை இரங்கல் பிச்சியார் கொற்றியார் முதலிய பிற உறுப்புக்களையும் சேர்த்துப்பாடப் பெற்ற கலம்பகங்களும் உள்ளன.

கலம்பகங்களை இயற்றும் போது தேவர்க்கு 100, முனிவர்க்கு 95, அரசர்க்கு 90, அமைச்சர்க்கு 70, வணிகர்க்கு 50, வேளாளர்க்கு 30, என்ற எண்ணிக்கையில் செய்யுட்களை அமைக்க வேண்டும்.

(எ-டு) மதுரைக் கலம்பகம், திருவரங்கக் கலம்பகம் நந்திக் கலம்பகம்.

புயவகுப்பு: என்பது பாட்டுடைத் தலைவனின் தோள்களைப் பலவாறாகப் புகழ்ந்து சந்தச் செய்யுளால் பாடுவதாகும் அம்மானை என்பது மூன்று பெண்கள் கூடி அம்மானை ஆடும் போது முதற்பெண் பாட்டுடைத் தலைவனைப் புகழ்ந்து கூற, இரண்டாவது பெண் அதிலே ஒரு ஐயத்தை எழுப்பி வினவ, மூன்றாவது பெண் ஐயம் நீங்குமாறு சிலேடையாய் விடை கூறுவதாகக் கலித்தாழிசையால் பாடுவதாகும். ஊசல் என்பது பாட்டுடைத் தலைவனைப் புகழ்ந்து "ஆடீருசல்" என்றேனும் ஆடாமோ ஊசல் என்றேனும் முடியுமாறு ஆசிரிய விருத்தம் அல்லது கலித்தாழிசையால் பாடுவதாகும். யமகம் என்பது மடக்கணி அமையுமாறு பாடுவதாகும். களி என்பது கள்ளுண்டு களித்த ஒருவன் கள்ளைச் சிறப்பித்துக் கூறும் கூற்றாகப் பாடுவதாகும். மறம் என்பது பெண்ணைப் பெற்ற மறவன், பெண் கேட்க வந்த தூதுவனை நோக்கிப் பெண் கொடுக்க மறுத்துக் கூறும் கூற்றாகப் பாடுவதாகும். சித்து என்பது இரசவாதவித்தையில் வல்ல சித்தர்கள் இழிந்த உலோகங்களை உயர்ந்த உலோகமாக ஆக்கித் தந்ததாகக் கூறுவதாய்ச் சிலேடை தோன்றப் பாடுவதாகும். காலம் என்பது கார் முதலிய காலங்களை

வருணித்துப் பாடுவதாகும். மதங்கியார் என்பது பாட்டுடைத் தலைவனைப் புகழ்ந்து இரண்டு கைகளிலும் வாளைச் சுழற்றி யாடும் மதங்கி என்ற பெண்ணைக் கண்டு காமுற்றான் கூறும் கூற்றாகப் பாடுவதாகும். வண்டுவிடுதூது என்பது காதலி ஒருத்தி பாட்டுடைத் தலைவனிடமிருந்து மாலை வாங்கி வருமாறு வண்டைத் தூதாக விடுவது. மேகவிடுதூது என்பது அங்ஙனமே மேகத்தைத் தூதாக விடுவது. கைக்கிளை மருட்பா என்பது காட்சி, ஐயம் துணிவு குறிப்பறிதல் என்னும் கைக்கிளைத் துறை நான்கனுள் ஒருதுறை பற்றி மருட்பாவால் பாடுவதாகும். சம்பிரதம் என்பது இந்திர ஜால வித்தையில் வல்லவன் ஒருவன் தனது வல்லமையைத் தானே புகழ்ந்து கூறும் கூற்றாய்ச் சிலேடை தோன்றப் பாடு வதாகும். தவம் என்பது உண்ணாமை முதலியன மேற் கொண்டு கடும் தவம் புரிவானை நோக்கி நினது தவத்தைக் கைவிட்டு எமது தலைவனை அடைந்தால் நின் விருப்பம் எளிதில் சித்திக்கும் என்று கூறுவதாகப் பாடுவதாகும்.

10. உலா இலக்கணத்தை எழுதுக (80 Sep)

*உலா*

உலா என்பது தெய்வமாவது அரசனாவது உலா வருதலைக் கண்டு ஏழ்பருவத்து மகளிரும் காமுற்றதாகப்பாடும் பிரபந்த மாகும். இது முதனிலையும் பின் எழுநிலையும் என இரு பகுதி களாக அமையும்படி ஒரே ஒரு கலிவெண்பாவால் பாடப் பெறும்.

முதனிலை என்பது பாட்டுடைத் தலைவனின் குடிப் பிறப்பும், நீதிநெறியும், மரபும், பொருள் கொளும் திறமும், பொருள் ஈயும் திறமும் என்பவற்றைக் கூறி அதன் பின் அவன் உலாப் போதற்காக விடியலில் நீராடுதலும் ஆடை அணிகளை அணிதலும், நகர மாந்தர் எதிர் கொள்ளுதலும் வீதியில் களிறூர்ந்து செல்லுதலும் என்பவற்றை விவரிப் பதாகும், முதனிலையாகிய இதனைக் குழாங் கொளல் என்று சிலர் கூறுவர்.

பின் எழு நிலை என்பது பேதை பெதும்பை மங்கை

மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் என்னும் ஏழ் பருவத்தாரின் இயல்புகளை விவரிப்பதாகும்.

பருவப் பெயரும் கால எல்லையும் :

பெண்பாற்கு

| | | | |
|---|---|---|---|
| 1. | பேதை | — | 5 முதல் 8 வரையான ஆண்டு |
| 2. | பெதும்பை | — | 9, 10-ம் ஆண்டு |
| 3. | மங்கை | — | 11 முதல் 14 வரையான ஆண்டு |
| 4. | மடந்தை | — | 15 முதல் 18 ,, ,, |
| 5. | அரிவை | — | 19 முதல் 24 ,, ,, |
| 6. | தெரிவை | — | 25 முதல் 29 ,, ,, |
| 7. | பேரிளம் பெண் | — | 30 முதல் 36 ,, ,, |

ஆண்பாற்கு

| | | | |
|---|---|---|---|
| 1. | பாலன் | — | பிறப்பு முதல் 7 வரையான ஆண்டு |
| 2. | மீளி | — | 8 முதல் 10 ,, ,, |
| 3. | மறவோன் | — | 11 முதல் 14 ,, ,, |
| 4. | திறவோன் | — | 15-ம் ஆண்டு |
| 5. | காளை | — | 16-ம் ஆண்டு |
| 6. | விடலை | — | 17 முதல் 30 வரையான ஆண்டு |
| 7. | முதுமகன் | — | 30க்கு மேற்பட்ட ஆண்டு |

ஆண்பாற்குப் பாலன் முதலாக ஏழ் பருவம் வகுக்கப் பட்டிருப்பினும் 16 ம் ஆண்டு முதல் 48 ம் ஆண்டு வரையான ஆடவர் மேல் தான் உலாப் பாடவேண்டும்.

பெண்பாற்கு ஏழ் பருவமும் வைத்துப் பாடவேண்டும். அங்ஙனம் பாடுங்கால் சிற்றிலிழைத்தலும், பாவையை வைத்து விளையாடலும், கழங்காடலும், அம்மானை ஆடலும், ஊஞ்சலாடலும்; கிளியொடு பேசலும், யாழ்மீட்டலும், புனலாடலும், பொழில் விளையாடலும், மதுநுகர்தலும் முதலாயினவற்றை அவ்வப் பருவத்திற்கேற்பன அறிந்து பாட வேண்டும்.

அரசர், கடவுளர், சான்றோர், நால்வகை வருணத்தார் ஆகியோர் மேல் உலாச் செய்யுள் பாடலாம். (எ-டு) 1. சேரமான் பாடிய ஆதியுலா. (கடவுள் மேல் பாடியது.) 2. ஒட்டக்கூத்தர் பாடிய விக்கிரம சோழனுலா (அரசன் மேல் பாடியது.)

11. "முதனிலை, பின்னெழு நிலை, உலா வெண்கலி" இதனுள் கிடக்கும் முதனிலையும் எழுநிலையும் விளக்குக. (79 Apl)

விடை : 10-னுள் காண்க.

12. ஆண்பால் பருவத்திற் கெல்லையும் பெயருமாக இவை வியல் கூறுவனவற்றை வரைக. (79 Apl)

விடை : 10-னுள் காண்க.

13. பரணி இலக்கணத்தை எழுதுக. (80 Sep)

பரணி என்பது போர்க்களத்தில் எண்ணற்ற யானைகளைக் கொன்று வெற்றி பெற்ற மன்னன் மீது பாடப் பெறும் இனமாகும். எழுநூறு யானைகளைக் கொன்றால் அவன் மீது பரணி பாடலாம் என்று பன்னிருபடலம் கூறுகிறது. ஆனை ஆயிரம் அமரிடை வென்றவன் மீது பரணி பாட வேண்டும் என்று இலக்கண விளக்கப் பாட்டில் கூறுகிறது.

பரணி என்ற இனத்தைக் கொச்சகக் கலியில் வருகின்றதும் ஈரடியால் நடக்கின்றதுமான தாழிசை என்றுறுப்பினால் பாடவேண்டும். மற்றும் வஞ்சி சூடிப் போருக்கெழுந்து உழிஞை சூடி அரணை முற்றுகையிட்டுப் பின்பு தும்பை சூடி ஒரு களத்தில் போரிட்டு வென்று கழல் புனைந்த மன்னனைப் புகழ வேண்டும். மேலும் மாற்றானின் சேனையை வீட்டிக் குருதிப் பேராறு ஓடுகின்ற செங்களத்தில் வெற்றிக் கொண்ட தனித்தன்மையைப் புகழ வேண்டும்.

பரணியில் கடவுள் வாழ்த்து, கடைதிறப்பு, பாலைநிலை, காளிகோயில், காளியைப் பேய்கள் ஏத்தல், ஒருபேய் இந்திர

ஜாலம் காட்டல், பாட்டுடைத் தலைவனின் மரபு கூறல், ஒரு பேய் கனுநிலை கூறல், அப்பேய் நன்னிமித்தம் கூறல் பேய்களின் பசி கூறல், காளி ஓகை (மகிழ்ச்சி) வரும் எனல், பகைவர் நாட்டுத் தீ நிமித்தம் கூறல், பாட்டைத் தலைவன் போரிட்டு வாகை சூடுவது கூறல், காளிப் பேய்க்குக் களங் காட்டல், கூழட்டு வார்த்தல், மன்னனை வாழ்த்தல் எனபன வும் பிறவும் பொருந்துமாறு பாட வேண்டும்.

(எ டு) கலிங்கத்துப் பரணி.

14. சின்னப்பூ, மடல், மறம் என்பனவற்றை விளக்குக.

சின்னப்பூ என்பது மலை, யாறு நாடு, ஊர், குதிரை, யானை, கொடி, முரசு, மாலை, பெயர் என்ற பத்துப் பொருள் களையும் சிறப்பித்துப் பாடும் பிரபந்தமாகும். இதனைப்பாடுங் கால் நேரிசை வெண்பாக்களின் முதற் குறட்பாவின் கண் ணே, அச்சின்னங்களின் தொழிலைக் கூறிப் பிந்திய குறட் பாவின் கண்ணே பாட்டுடைத் தலைவனின் இயற்பெயரையும் அச்சின்னம் அவனுக்கு உரிமை யாதலையும் கூற வேண்டும். மற்றும் நேரிசை வெண்பாக்களை நூறு, தொண்ணூறு, எழு பது, ஐம்பது அல்லது முப்பது என்ற எண்ணிக்கையில் அமைத்து நூலியற்ற வேண்டும். இனிப்பத்துச் சின்னங்களை யும் பாடாமல் ஏழு அல்லது மூன்று சின்னங்களை மட்டும் சிறப்பித்துப் பாடுவதும் உண்டு.

சின்னப்பூவுக்கு இனமாகத் தசாங்கப்பத்து என்று மற்றோர் பிரபந்தம் உண்டு தசாங்கப் பத்து என்பது மலை முதலிய பத்துச் சின்னங்களையும் ஒரு சின்னத்துக்கு ஒரு நேரிசை வெண்பாவாகப் பத்துப் பாடலால் பாடுவதாகும்.

(எ—டு) திருவாசகத்தில் உள்ள தசாங்கபத்து.

மடல்

மடல் என்பது தன்னால் காதலிக்கப் பெற்றாரைப் பெறும் பொருட்டு ஆடவனே மங்கையோ பனைமடலால் செய்யப்

பெற்ற குதிரை மீது ஏறப் போவதாய்க் கூறும் கூற்றாக ஓரே ஒரு கலிவெண்பாவால் பாடும் இனமாகும். அது வளமடல், உலாமடல் என இரு வகைப்படும்.

வளமடல் என்பது ஆடவன் ஒருத்தன் தனியிடத்தே ஒருத்தியைக் கண்டபின் காமம் தன்னை வருத்துதலால் அறம் பொருள் வீடு என்ற மூன்றையும் இகழ்ந்துரைத்தும் காமத்தை மட்டுமே சிறந்ததெனப் பாராட்டியும், தான் கண்ட நங்கையைப் புகழ்ந்தும், அவளது உருவத்தைத் தன் கைப்படக் கிழியில் எழுதிக் கைப்பிடித்தும் மடல்மா ஏறப் போவதாகக் கூறும் கூற்றாய்ப் பாடுவதாகும் மங்கை ஒருத்தி உலாவரும் தலைவனைக் கண்ட பின் அங்ஙனமே மடல்மா ஏறப் போவதாகக் கூறும் கூற்றாய்ப் பாடுவதும் வளமடலே ஆகும். அங்ஙனம் பாடும்போது பாட்டுடைத் தலைவனின் இயற்பெயரின் எதுகையே எல்லா அடியினும் அமையுமாறு நாட்டித் தனிச் சொல் இன்றி ஒரே ஒரு கலிவெண்பாவாகப் பாடவேண்டும். மற்றும் மகளிர் மடலேறுவதாகப் பாடும் போது கடவுளரைத் தலைவராக வைத்துப் பாடவேண்டும்.

(எ—டு) திருமங்கையாழ்வார் பாடிய பெரிய திருமடல் சிறிய திருமடல், (இவை மகளிர் மடலேறப் போவதாகப் பாடியவை)

உலா மடல் என்பது கனவில் ஒருத்தியைக் கண்டு நுகர்ந்த தலைவன், நனவில் அவளைப் பெறும் பொருட்டு மடல்மா ஏறப்போவதாகக் கூறும் கூற்றாகக் கலிவெண்பா வால் பாடும் பிரபந்தமாகும்.

(எ—டு) வருணகுலாதித்தன் மடல்.

## மறம்

மறம் என்பது பெருநில வேந்தனுக்கு மகள் கேட்டு வந்த தூதனின் தூதுமொழியைக் கேட்டுக் குறுநிலத்து மறவன் சினம் மிகுந்து பெண்கொடுக்க மறுத்துத் தனது வீரத்தை மிகுந்துக் கூறும் இனமாகும். இதனை வெண்பா அல்லது

ஆசிரிய விருத்தத்தால் பாடுவர். இப்பிரபந்தம் தனி நூலாய் இருப்பதாகத் தெரியவில்லை. கலம்பகங்களில் மறம் என்ற உறுப்பாகவும், புறப்பொருள் வெண்பா மாலையில் மகள் மறுத்து மொழிதல் என்ற துறையாகவும் பேசப்பட்டுள்ளது.

15. சின்னப்பூ, மடல் பற்றிய பாட்டியல் கருத்தினை விவரிக்க (80 Apl.)

விடை : 14–னுள் காண்க.

16. மாலை என்ற சிற்றிலக்கிய இனங்களை எழுதி இரண்டை விளக்குக. (81 Apl.)

பன்னிரு பாட்டியலில் மாலை என்ற சிற்றிலக்கிய இனங்களாகக் கூறப்பட்டவை வருமாறு :—

1. பல்சந்தமாலை 2. இணைமணி மாலை 3. இரட்டை மணி மாலை 4. மும்மணி மாலை. 5. நான்மணி மாலை 6. கலம்பகமாலை 7. வருக்கமாலை 8. நாம மாலை 9 நவமணி மாலை 10. கைக்கிளை மாலை 11. தாரகை மாலை 12. செந்தமிழ் மாலை.

## பல்சந்தமாலை

பல்சந்தமாலை என்பது கலம்பகத்துக்குரிய ஒரு போகு முதலிய செய்யுட்களையும் புயவகுப்பு முதலிய உறுப்புக்களையும் நீக்கிப் பத்துவகையான சந்தப்பாக்களினால் 10, 20. 30, 40, 50, 60, 70, 80, 90 அல்லது 100 என்ற எண்ணிக்கையில் அந்தாதியாகப் பாடப்பெறும் பிரபந்தமாகும். (எ-டு) வின்னன் என்ற முகமதியன் பேரில் பாடிய பல்சந்தமாலை.

(விதி) சொன்ன கலம்பக உறுவகை நீக்கி
மன்னிய பத்து முதல்நூ றளவா
வந்த மரபின் வருஉம்செய்யுள் முதலா
வந்தது பல்சந்த மாலையாகும்

## வருக்க மாலை

வருக்கமாலை என்பது மொழிக்கு முதலில் வரும் எழுத்துக்கள் ஒவ்வொரு அடியின் முதற்கண்ணும் வருமாறு உயிர் வருக்கத்துக்கு ஒன்றும் கசதநபமவ என்ற ஏழு உயிர்மெய் வருக்கத்துக்கு ஏழுமாக எட்டு ஆசிரியப் பாவால் பாடப் பெறும் பிரபந்தமாகும். (ஈண்டு யகர ஙகர வருக்கங்களை நீக்கி விடுவது வழக்கம்.)

மொழிக்கு முதலில்வரும் எழுத்துக்களெல்லாம் முறையே ஒவ்வொரு செய்யுளுக்கு ஒவ்வொரு எழுத்து முதலெழுத்தாக வருமாறு பாடும் பிரபந்தம் வருக்கமாலையாகும் என்று இலக்கண விளக்கப் பாட்டியல் கூறுகிறது.

(எ—டு) திருவேரக வருக்கமாலை.

(விதி) மொழிமுத லாகிய எழுத்துக் கெல்லாம்
வருக்கம் உரைப்பது வருக்க மாலை.

17. இணைமணிமாலை, இரட்டைமணிமாலை, இருபா இருபஃது — இவற்றின் இலக்கணம் எழுதி ஒற்றுமை வேற்றுமைகளை ஆராய்க.

1. இணைமணி மாலை என்பது வெண்பாவும் கட்டளைக் கலித்துறையும் ஒன்றன்பின் ஒன்றாகத் திரும்பத் திரும்ப வருமாறு நூறு செய்யுட்கள் என்ற எண்ணிக்கை தாதியாகப் பாடும் இனமாகும்

(விதி) இணைமணி மாலை தணிவிலந் தாதியாய்
மறையவர் பாவும் வணிகர்தம் பாவின்
துறையும் இயைந்து ஈரைம்பது வருமே,

2. இரட்டைமணி மாலை என்பது வெண்பாவும் கட்டளைக் கலித்துறையும் ஒன்றன்பின் ஒன்றாகத் திரும்பத் திரும்ப வருமாறு இருபது செய்யுட்கள் என்ற எண்ணிக்கையில் அந்தாதியாகப் பாடும் இனமாகும்,

(விதி) வெண்பா முதலாகக் கலித்துறை பின்வரும்
இந்த இருபது இரட்டைமணி மாலை.

3. இருபா இருபஃது என்பது வெண்பாவும் ஆசிரியப் பாவும் ஒன்றன்பின் ஒன்றாகத் திரும்பத் திரும்ப வருமாறு இருபது செய்யுட்கள் என்ற எண்ணிக்கையில் அந்தாதியாகப் பாடும் இனமாகும்.

(விதி) வெள்ளை அகவல் பின்னர் முறைவைத்து
எள்ளாது இயல்வது இருபா இருபஃது

ஒற்றுமை: 1. இந்த மூன்று இனங்களும் அந்தாதியாக அமைவதில் ஒற்றுமை உடையன. 2. இணைமணி மாலையும் இரட்டை மணி மாலையும் வெண்பாவும் கட்டளை கலித்துறையும் பெற்று வருவதில் ஒற்றுமை உடையன. 3. இரட்டை மணி மாலையும் இருபா இருபஃதும் 20 செய்யுட்கள் பெற்று வருவதில் ஒற்றுமை உடையன.

வேற்றுமை: 1. முதல் இரண்டு இனமும் வெண்பாவும் கட்டளைக் கலித்துறையும் பெற மூன்றாவது இனம் வெண்பாவும் அகவலும் பெறுவதில் வேற்றுமையுடையன 2. முதல் இனம் 100 செய்யுள் பெற ஏனைய இரண்டினமும் 20 செய்யுட்கள் பெறுவதில் வேற்றுமையுடையன.

18. மும்மணிமாலை – மும்மணிக் கோவை கலம்பகம்— கலம்பகமாலை, நாமமாலை—புகழ்ச்சிமாலை என்பவற்றின் இலக்கணம் எழுதி ஒப்பிட்டு ஆராய்க.

மும்மணிமாலை - மும்மணிக்கோவை

மும்மணி மாலை என்பது வெண்பாவும், கட்டளைக் கலித்துறையும், ஆசிரிய விருத்தமும் ஆகிய மூன்றும் முறையே ஒன்றன்பின் ஒன்றாகத் திரும்பத் திரும்ப வருமாறு முப்பது செய்யுட்கள் என்ற எண்ணிக்கையில் அந்தாதி யாகப் பாடும் இனமாகும்.

(விதி) மிகுத்த வெள்ளை கலித்துறை அகவல்
விருத்தம் மும்மணி விளம்பும்அந் தாதி.

மும்மணிக் கோவை என்பது நேரிசை ஆசிரியப்பாவும் நேரிசை வெண்பாவும் கட்டளைக்கலித் துறையும் ஆகிய மூன்றும் முறையே ஒன்றன்பின் ஒன்றாகத் திரும்பத் திரும்ப வருமாறு முப்பது செய்யுட்கள் என்ற எண்ணிக்கையில் அந்தாதியாகப் பாடும் இனமாகும்.

(விதி) வெள்ளையும் அகவலும் நேரிசையாகக்
கலித்துறை வர அந்தாதி ஆகி
முறைமையின் இயல்வது மும்மணிக்கோவை.

இவ்விரண்டு இனங்களும் அந்தாதியாக வருவதிலும் 30 செய்யுட்களைப்பெறுவதிலும் ஒற்றுமை உடையன. மற்றும் வெண்பாவும் கட்டளைக் கலித்துறையும் பெறுவதிலும் ஒற்றுமை உடையன. ஆனால் மும்மணிமாலை ஆசிரிய விருத்தம் பெறுவதிலும், மும்மணிக்கோவை ஆசிரியப்பாப் பெறுவதிலும் வேற்றுமையுடையன.

## கலம்பகம் - கலம்பக மாலை

கலம்பகம் என்பதை விடை 9-னுள் காண்க.

கலம்பகமாலை என்பது கலம்பகத்துக்குச் சொல்லப்பட்ட உறுப்புக்களில் ஒரு போகு, அம்மானை என்ற இரண்டையும் நீக்கிவிட்டு மற்ற எல்லா உறுப்புக்களையும் வைத்து அந்தாதியாகப் பாடும் இனமாகும்.

இரண்டு இனமும் அந்தாதியாக வருதலிலும் பிற உறுப்புக்களை எல்லாம் பெறுதலிலும் ஒற்றுமையுடையன. கலம்பகமானதுஒரு போகு அம்மானை என்ற இரண்டையும் அதிகமாகப் பெற்றும் கலம்பக மாலை இவ்விரண்டையும் பெறாமலும் வருவதில் வேற்றுமையுடையன.

## நாமமாலை . புகழ்ச்சி மாலை

நாம மாலை என்பது ஒரு ஆடவனின் புகழைப் பல்வகையான அடிமயக்கமும் கலந்து வருகின்ற வஞ்சிப் பாவால் பாடும் இனமாகும்.

(விதி). மைந்தர்க் காயின் வஞ்சிப் பல்வகை
நேர்ந்த அடிமயக்கம் நாம மாலை

புகழ்ச்சி மாலை என்பது ஒரு மடந்தையின் புகழைப் பல் வகையான அடிமயக்கமும் கலந்து வருகின்ற வஞ்சிப்பாவால் பாடும் இனமாகும்.

(விதி) நாம மாலை மற்றது மடந்தையர்க்கு
ஆமெனில் புகழ்ச்சி மாலை யாகும்.

(குறிப்பு : புகழ்ச்சி மாலையைப் பன்னிருபாட்டியல் கூறவில்லை. ஆனால் அந்நூலில் காட்டிய மேற்கோளில்—கோவூர் கிழாரின் நூற்பாவில்—குறிக்கப்படுகிறது.)

இவ்விரண்டு இனங்களும் அடிமயக்கம் பெற்ற வஞ்சிப் பாவால் பாடுதலில் ஒற்றுமையுடையன. நாம மாலை ஆடவர் புகழையும், புகழ்ச்சிமாலை மடந்தையர் புகழையுப் கூறுவதில் வேற்றுமையுடையன.

19. நான்மணி மாலையின் இலக்கணத்தை எழுதுக.

நான்மணிமாலை என்பது வெண்பாவும், கட்டளைக் கலித் துறையும், அகவற்பாவும், ஆசிரிய விருத்தமும் ஆகிய நான் கும் முறையே ஒன்றன்பின் ஒன்றாகத் திரும்பத் திரும்ப வரு மாறு நாற்பது என்ற செய்யுள் எண்ணிக்கையில் அந்தாதி யாகப் பாடும் இனமாகும் (எ-டு) நால்வர் நான் மணிமாலை

(விதி) வெண்பாக் கலித்துறை அகவல் விருத்தம்
நண்பாய் வருவது நான்மணி மாலை

(குறிப்பு. வெண்பா, கட்டளைக்கலித்துறை, ஆசிரிய விருத்தம் அகவல் என்ற முறைவைப்பில் அந்தாதியாக நாற் பது செய்யுள் பாடுவது நான்மணிமாலை என்று இலக்கண விளக்கப் பாட்டியல் கூறுகிறது நால்வர் நான்மணிமாலை இந்த முறைவைப்பில்தான் பாடப்பட்டிருக்கிறது.

20. நவமணிமாலை, கைக்கிளை மாலை, தாரகை மாலை, செந்தமிழ் மாலை—இவற்றின் இலக்கணத்தை வரைக.

## நவமணி மாலை

நவமணி மாலை என்பது பாக்களும் இனங்களும் கலந்து வரும்படி வெவ்வேறு வகையான ஒன்பது செய்யுட்களால் அந்தாதியாகப் பாடும் இனமாகும். (எ-டு) சிவப்பிரகாசர் இயற்றிய பிட்சாடன நவமணி மாலை.

(விதி) பாவே இனமே என்றிவை இரண்டு
மேவிய வகையது நவமணி மாலை

## கைக்கிளை மாலை

கைக்கிளை மாலை என்பது தலைவனாவது தலைவியாவது. தாயர் முதலியோரால் வருத்தமுற்று அறிவு மயங்குதற்குக் காரணமான ஒருதலைக் காமமாகிய கைக்கிளைப் பொருளில் கூறும் கூற்றாய் மருட்பாவால் பாடும் இனமாகும்.

அங்ஙனம் பாடும்போது தாயர், சேரியர், இடையர் ஊதும் குழலோசை, தென்றல், பசுவின் மணி ஓசை, அன்றில்பறவை, திங்கள், கடல், வீணையிசை, மாலைக் காலம், இரவு, மன்மதனின் ஐங்கணைகள், கனவு, வேனிற்காலம், குயில், கிளி, படுக்கை, பழகும் இடங்கள், பாங்கர், பாங்கியர் ஆகியோரால் இயன்ற பருவரலை (உண்டாகும் வருத்தத்தை) எடுத்துரைக்க வேண்டும். முல்லை, அசோகு மாந்தளிர், தாமரை, நீலப்பூ என்ற ஐந்தும் மன்மதனின் கணைகள்.

இதனைமருட்பாவால் பாடுவது வழக்கம், இனிவெண்பா கலிப்பா, ஆசிரியம், அவற்றின் இனங்கள் என்பவற்றாலும் பாடுதல் உண்டு. இந்த இனத்தை ஐந்து அல்லது இருபத்தைந்து செய்யுட்களால் பாடவேண்டும் என்று பிற பாட்டியல்கள் கூறுகின்றன.

## தாரகை மாலை

தாரகை மாலை என்பது இருபொருள் படும் படிச் சிலேடையாக இருபத்தேழுவகைச் செய்யுட்களால் பாடும் இனமாகும். தாரகை என்பது நட்சத்திரம். அவை இருபத்

தேழு. ஆகவே இருபத்தேழுவகைச் செய்யுட்களால் பாடுவ தால் இவ்வினம் தாரகை மாலை எனப்பெயர் பெற்றது.

(விதி) இரண்டு பொருள்புணர் இருபத்தெழுவகைச்
சீரிய பாட்டே தாரகைமாலை.

## செந்தமிழ் மாலை

செந்தமிழ் மாலை என்பது ஏதேனும் ஒரு பொருள் பற் றிச் சிலேடையின்றி இருபத் தேழுவகைச் செய்யுட்களால் பாடும் இனமாகும், அங்ஙனம் பாடுங்கால் நான்கு வகைப் பாக்களும் அவற்றின் இனங்களும் கலந்து வருமாறு பாடு வதும் உண்டு; நான்கு வகைப்பாக்களால் மட்டும் பாடுவதும் உண்டு. ஏதேனும் ஒருபாவின் இனங்களால் மட்டும் பாடு வதும் உண்டு.

(விதி) எப்பொரு ளேனும் இருபத் தெழுவகை
செப்பிய நெறியது செந்தமிழ் மாலை

21. கைக்கிளையில் பருவரல் தருவனவாக் கூறப் பெறுவன யாவை? (79 Sep)

விடை : 20-னுள் காண்க

22. அந்தாதி என்ற சிற்றிலக்கிய இனங்களை எழுதி இரண்டை விளக்குக.

பன்னிரு பாட்டியலில் அந்தாதி என்ற சிற்றிலக்கிய இனங்களாகக் கூறப்பட்டவை வருமாறு:—

1. கலியந்தாதி
2. ஒலியந்தாதி
3. வெண்பா அந்தாதி
4. கலித்துறை அந்தாதி

(இவைகளேயன்றிப் பதிற்றந்தாதி பதிற்றுப் பத்தந் தாதி, யமக அந்தாதி, நிரோட்டக யமக அந்தாதி, திரிபந் தாதி என்பனவும் உள்ளன)

## கலியந்தாதி

கலியந்தாதி என்பது வண்ணப்பாக்களோடு இடையிடையே வெண்கலிப்பாவும் விரவி வருமாறு அந்தாதியாகப் பாடும் இனமாகும். அங்ஙனம் பாடும்போது வண்ணப் பாவில் (சந்தப்பாட்டில்) ஒருகலையில் அமைந்த வல்லின மெல்லின இடையின எழுத்துக்கள் ஏனைய கலைகளிலும் மாறுமல் ஒன்றி வருமாறும், குறில் நிற்க வேண்டிய இடத்தில் குறிலும் நெடில் நிற்க வேண்டிய இடத்தில் நெடிலுமாக ஒன்றி வருமாறும் நான்கு கலைகள் கொண்டது ஓரடியாக நான் கடிகளை உடையதாய் இருக்குமாறும், ஓரே ஒலியாக அமையுமாறும் பாட வேண்டும். இனி எட்டுக் கலைகளைக் கொண்டது ஓரடியாக நான்கடி வைத்தும் பாடலாம். முதற்சொல் குறிலாகத் தொடங்கினுல் ஏனைய செய்யுட்களும் குறிலாகத் தொடங்க வேண்டும்; நெடிலாகத் தொடங்கினுல் ஏனையவும் நெடிலாகவே தொடங்க வேண்டும். இவ்வகையில் 30 வண்ணப்பாக்களையும் இடையிடையே சில வெண்கலிப்பாக்களையும் கலந்து 30க்கு மேற்பட்ட செய்யுட்களால் அந்தாதியாகப் பாடவேண்டும்.

இனி ஓரடிக்கு எட்டுக்கலை என்று பாடும்போது முதம் நான்கு கலைகள் ஓரொலியாகவும் பின் நான்கு கலைகள் மற்ருேர் ஒலியாகவும் பாடலாம்.

## ஒலி அந்தாதி

ஒலி அந்தாதி என்பது முப்பது வண்ணப் பாக்களால் அந்தாதியாகப் பாடும் இனமாகும். அங்ஙனம் பாடும்போது கலியந்தாதி போலவே இலக்கணம் பெற்று பாடப்பெறும்; ஆனுல் இடையிடையே வெண்கலிப்பாவோ வேறுபாக்களோ விரவி வரமாட்டா. 30 வண்ணப்பாக்கள் மட்டும் அந்தாதியாகப் பாடப்பெறும்.

இவ்விரண்டு இனங்களும் அந்தாதியாக வருவதிலும் வண்ணப் பா முப்பது பெறுவதிலும் ஒற்றுமையுடையன. கலியந்தாதி இடையிடையே வெண்கலிப்பா பெற்றும்,

ஒலியந்தாதி; வெண்கலிப்பா பெருமலும் வருவதில் வேற்று மையுடையன. மற்றும்கலியந்தாதி ஒரோவழி ஈரொலியாகப் பாடப் பெறுவதிலும் ஒலியந்தாதி ஒரு ஒலியாக மட்டும் பாடப் பெறுவதிலும் வேற்றுமையுடையன.

23. வெண்பாக்களைக் கொண்டு பாடப்பெறும் இனங்கள் யாவை ? அவைத் தம்முள் வேறுபாடென்ன ?

வெண்பாக்களைக் கொண்டு பாடப் பெறும் இனங்களாகப் பன்னிரு பாட்டியலில் கூறப்பட்டவை வருமாறு :

1. குடைமங்கலம் 2. சின்னப்பூ 3. இன்னிசைத் தொகை (ஊரின்னிசை, பெயரின்னிசை) 4. நாழிகைக்கவி 5. செருக்களவழி 6 வெண்பா அந்தாதி 7. கீழ்க்கணக்கு.

## வேறு பாடு

1. குடைமங்கலம் நேரிசை வெண்பாவால் பாடுதலும் 10 பாடல்களைப் பெறுதலும், குடையைச் சிறப்பித்தலுமாக அமையும்.

2. சின்னப்பூ நேரிசை வெண்பாவால் பாடுதலும், 100, 90, 70, 50 அல்லது 30 பாடல்களைப் பெறுதலும், மலைமுதலிய சின்னங்களைச் சிறப்பித்தலுமாக அமையும்.

3. (a) ஊரின்னிசை இன்னிசை வெண்பாவால் பாடுதலும், 90 அல்லது 70 பாடல்களைப் பெறுதலும், ஊரைச் சிறப்பித்தலுமாக அமையும்.

3. (b) பெயரின்னிசை இன்னிசை வெண்பாவால் பாடுதலும், 90 அல்லது 70 பாடல்களைப் பெறுதலும், பாட்டுடைத் தலைவனின் பெயரைச் சிறப்பித்தலுமாக அமையும்.

4. நாழிகைக் கவி நேரிசை வெண்பாவால் பாடுதலும் 30 பாடல்களைப் பெறுதலும், 30 நாழிகைகளுக்கும் உரிய இயல்புகளைச் சிறப்பித்தலுமாக அமையும்.

5. செருக்கள வழி நேரிசை, இன்னிசை. அல்லது பஃறொடை வெண்பாக்களால், பாடுதலும், ஒன்று அல்லது பல பாடல்களைப் பெறுதலும் செருக்களத்தைச் சிறப்பித்தலுமாக அமையும்.

6. வெண்பா அந்தாதி நேரிசை வெண்பாவால் பாடுதலும் 30 முதல் 100 வரையான பாடல்களைப் பெறுதலும், ஏதேனும் ஒரு பொருளைச் சிறப்பித்தலும் அந்தாதியாக வருதலுமாக அமையும்

7. கீழ்க்கணக்கு குறள் சிந்தியல் இன்னிசை நேரிசை பஃறொடை வெண்பாக்களால் பாடுதலும், 50 முதல் 500 வரையான பாடல்களைப் பெறுதலுமாக அமையும்.

24. விருத்தம் என்ற சிற்றிலக்கிய இனங்களை எழுதி விளக்குக.

பன்னிருபாட்டியலில் விருத்தம் என்ற சிற்றிலக்கிய இனங்களாகக் கூறப்பட்டவை வருமாறு:

1. பரி விருத்தம் 2. சிலை விருத்தம்
3. கரி விருத்தம் 3. வாள் விருத்தம்
5. குடை விருத்தம் 6 வேல் விருத்தம்
7. செங்கோல் விருத்தம் 8. நாட்டு விருத்தம்
9. ஊர் விருத்தம் 10. ஐம்படை விருத்தம்

## பரி விருத்தம் முதலிய ஒன்பது விருத்தங்கள்

பாட்டுடைத் தலைவனின் குதிரையைச் சிறப்பித்துப் பத்து ஆசிரிய விருத்தங்களால் பாடுவது பரிவிருத்தமாகும் அங்ஙனமே வில், யானை, வாள், குடை, வேல், செங்கோல் நாடு, ஊர், என்னும் ஒவ்வொன்றையும் தனித்தனியே பத்துப் பத்து ஆசிரிய விருத்தங்களால் பாடுவது சிலை விருத்தம் முதலியனவாகும்.

(விதி) பரிசிலே யானே வாளிகுடை வேல்செங்
கோலொடு நாடூர் உறுப்பின் அகவல்
விருத்தும் பத்தென வேண்டினர் புலவர்

## ஐம்படை விருத்தம்

திருமாலுடைய சக்கரம், வில், வாள் சங்கு தண்டு என்னும் ஐம்படைகளேயும் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு ஆசிரிய விருத்தமாக ஐந்து பாடல்களால் பாடுவது ஐம்படை விருத்தமாகும். (தண்டு—கதை)

(விதி) சக்கரம் தனுவாள் சங்கொடு தண்டிவை
ஐம்படை அகவல் விருத்தம் ஆகும்.

25. வஞ்சிப்பாவால் பாடப்பெறும் சிற்றிலக்கிய இனங்கள் யாவை? இரண்டன் இலக்கணத்தை எழுதுக.

வஞ்சிப் பாவால்பாடப்பெறும் சிற்றிலக்கிய இனங்கள் வருமாறு :

1, யானைத்தொழில்
2. நாம மாலே
3. மறக்கள வஞ்சி
4. பறைநிலே

## யானைத்தொழில்

யானேத்தொழில் என்பது பாட்டுடைத் தலைவனின் யானையினது மூவகை நிலம், மூவகை நிறைவு, பல்வகைத் தேயம், எழுவகை உறுப்பு, வருணம், வயது, ஐவகைக் கொலே, இருவகை நடை, ஐவகை உணர்வு, உடையோர்ப் பேணல் என்ற பத்துப் பொருள்களேயும் பத்து வஞ்சிப்பாக் களால் சிறப்பித்துப் பாடும் இனமாகும்.

1. கிரிசரம், வனசரம், நதிசரம் என்ற மூன்றும் மூவகை நிலம். 2. உயரம், நீளம், சுற்றளவு என்ற மூன்று அளவிலும் குறைவற நிறைதல் மூவகை நிறைவு 3. யானே பிறக்கும் பல்வேறு நாடுகளே பல்வகைத் தேயம் 4. நான்கு

கால்கள், துதிக்கை, வால், குறி என்ற ஏழு உறுப்பும் நிலம் தோயுமாறு அமைதல் எழுவகை உறுப்பு. 5. யானைகளுக்குக் கூறப்படுகிற பல்வகைச் சாதிகள் வருணம் 6. யானையின் வாழ்நாளாகிய யாண்டைக் கூறுதல் வயது. 7. துதிக்கை. முற்கூறுகிய தலை, பிற்கூறுகிய பிருஷ்டம் இரண்டு கொம்புகள் ஆகிய ஐந்து உறுப்புக்களால் செய்யும் கொலைத் தொழிலே ஐவகைக் கொலை 8. முன்கால்களை ஊன்றிய சுவடுகளிலேயே பின் கால்களை ஊன்றி நடத்தல் தோரண நடை; இதற்கு மாறாகக் கால் வைத்து நடப்பது வக்கிர நடை—இவை இரண்டும் இருவகை நடை 9. சார்ந்தோர்க்கு நன்மை செய்தலும், பகைவர்க்குத் தீங்கு செய்தலும் தனக்கு வரும் நன்மையை நினைத்தலும், தீமையை நினைத்தலும், தீமை செய்தாரைப் பழிவாங்க காலங்கருதி நினைவில் வைத்தலும் என்பன ஐவகை உணர்வு. 10. தனது தலைவன் இடும் பணியைத் தவறாது செய்தல் உடையோர்ப் பேணல்.

யானைத்தொழிலை வஞ்சிப்பாவால் பாடுதல் பெரு வழக்காகும். சிறுபான்மை ஆசிரியப் பாவால் பாடுதலும் உண்டு.

## *பறை நிலை*

பறைநிலை என்பது கடவுளர் விழாவின் போதும், மன்னர் முடிசூடும் விழாவின் போதும் வேந்தன் இன்பமுறக் கடவுளர் காத்தளிக்க என்றும் நாடும் நகரமும் நலம் பெறுக என்றும் வள்ளுவன் பறையறைந்து கூறும் கூற்றாக வஞ்சிப் பாவால் பாடும் இனமாகும்.

(விதி) காவலர் இனிதுறத் தேவர்காத் தளிக்கென
கடவுளர் விழவினும் கதிர் முடி விழவினும்
நாடும் நகரமும் நலம் பெற இயம்பி
வருநெறி வஞ்சி வழங்கப் பற்றிய
மொழிவரத் தொடுப்பது பறைநிலை ஆகும்.

26. நிலை என்று முடியும் சிற்றிலக்கிய இனங்களுள் ஏதேனும் ஒன்றையேனும் நான்கன் இலக்கணத்தை வரைக.

பன்னிரு பாட்டியலில் நிலை என்று முடியும் சிற்றிலக்கிய இனங்களாகக் கூறப்பட்டவை வருமாறு :-

1. கண்படை நிலை
2. துயிலெடை நிலை
3. விளக்கு நிலை
4. கடா நிலை
5. யாண்டு நிலை
6. பறை நிலை
7. குடை நிலை
8. கையறு நிலை

## கண்படை நிலை

கண்படை நிலை என்பது காலை பகல் மாலை என்ற மூன்று பொழுதினும் மனம் ஒன்றிய நிலையில் அறத்தியலையும் அமைச்சியலையும் அரசியலையும் இயலிசை நாடகங்களையும் நான்மறையில் விதித்தபடி நீ பெற்றாய் என்றும், ஊழிக் காலம் வரை நீ வாழ்க என்றும், இனிமேல் இனிய மகளிருடன் இன்பத்துயிலை மேவுக என்றும் ஒரு அரசனை நோக்கிச் கூறுவதாகப் பாடும் பிரபந்தமாகும்.

(விதி) காலைபகல் மாலை ஆழ்முறை அறத்தியல்
அமைச்சியல் அரசியல் ஏனை இயலிசை
நாட கத்திய லோடு நான் மறை
முறையே எய்தினை ஊழி வாழி
இனிய மகளிரோ டின்பத்துயில் கொள்கென
றிங்ஙனம் உரைப்பது கண்படை ஆகும்.

## துயிலெடை நிலை

துயிலெடை நிலை என்பது துயிலும் மன்னர்க்கு முன்னே சென்று குளிர்ந்த பொழுதாகிய விடியற்காலையின் இயல்புகளைச் சொல்லியும், 'முன்பே திறையளந்தாரும் இது காறும் திறையளக்காதாரும் நின்னைப் புகழ்ந்து நின் மொழி கேட்டு நடக்க விரும்பி வந்துள்ளனர்' என்றும் 'ஆகவே நீ துயில் எழுக' என்றும் சொல்லியும் சூதர் என்பார் துயில் எழுப்புவதாகப் பாடும் இனமாகும் (இதற்கு எடுத்துக் காட்டு கிடைக்கவில்லை.)

(விதி) கண்படை மன்னவர் முன்னர்த் தண்பத
விடியல் எல்லை இயல்புறச் சொல்லித்
தந்த திறையரும் தாராத் திறையரும்
ஏத்தி நின்மொழி கேட்டினி தியங்க
வேண்டினர் இத்துயில் எழுகென விளம்பின்
அதுவே மன்னவர் துயிலெடை நிலையே.

இனிக் கடவுளரை நோக்கி விடியற்காலத்தின் இயல்புகளைச் சொல்லியும், நோக்கத் தக்க மங்கலங்களைச் சொல்லியும் அடியார்களுக்கு அருளும் பொருட்டுத் துயில் எழுக என்று சொல்லியும் துயில் எழுப்புவதாகப் பாடும் பிரபந்தம் திருப் பள்ளி எழுச்சி எனப்படும். (எ-டு) திருவாசகத்திலும் நாலாயிரத்திலும் உள்ள திருப்பள்ளி எழுச்சிகள்,

## கடா நிலை

கடா நிலை என்பது மன்னர்கள் கொற்றவைக்குப் பலியிடும் எருமைக் கடாவின் இயல்புகளை எடுத்துரைக்கும் பிரபந்தமாகும்.

(விதி) கொற்றவை தனக்குக் கொற்றவர் எறியும்
கடாநிலை உரைப்பது கடா நிலை ஆகும்.

## யாண்டு நிலை

யாண்டுநிலை என்பது உலகாளும் மன்னவனை நோக்கி நிலை பெறுக என்றும் பல்லாண்டு வாழ்க என்றும் பாடும் பிரபந்தமாகும். இது பெரும்பாலும் நேரிசை வெண்பாவால் பாடப் பெறும் சிறுபான்மை வேறு பாக்களிலும் பாடப் பெறும்.

(விதி) வையக மன்னவன் மன்னுக : பல்யாண்டு
எய்துக என்பது யாண்டுநிலை யாகும்.

இனிக் கடவுளரை நோக்கி இவ்வாறு பாடும் பிரபந்தம் திருப்பல்லாண்டு எனப்படும். (எ-டு) :'பெரியாழ்வார்பாடிய திருப்பல்லாண்டு; சேந்தனார் பாடிய திருப்பல்லாண்டு.

27. கண்படை நிலையும் கடா நிலையும் பற்றி எழுதுக. (79 Sep)

விடை: 26-னுள் காண்க:

28 நாழிகைக் கவி, அரிபிறப்பு அட்ட மங்கலம் இவற்றின் இலக்கணம் வரைக.

## நாழிகைக் கவி

நாழிகைக் கவி என்பது நான்கு யாமங்களுக்கும் உரிய, 30 நாழிகைகளின் சிறப்புக்களை 30 நேரிசை வெண்பாக்களால் பாடும் பிரபந்தமாகும். அங்ஙனம் பாடும்போது முதல் யாமத்துக்கு எட்டும் இரண்டாம் யாமத்துக்கு ஏழும், மூன்றும் யாமத்துக்கு ஏழும், நான்காம் யாமத்துக்கு எட்டும் என்று செய்யுட்களை வகுத்துக் கொண்டு அரசனையாவது கடவுளரையாவது முன்னிலைப் படுத்திப் பாட வேண்டும். ஒவ்வொரு நாழிகைக்கும் உரிய சிறப்பியல்பை ஒவ்வொரு வெண்பாவிலும் குறிக்க வேண்டும், 8-ம் பாட்டில் யாமம் ஒன்று என்றும் 15-ம் பாட்டில் யாமம் இரண்டு என்றும், 22 ம் பாட்டில் யாமம் மூன்று என்றும், 30-ம் பாட்டில் யாமம் நான்கு என்றும் குறிக்க வேண்டும்

(விதி) ஈரிரண்டு யாமத்து இயன்ற நாழிகைச்
சீர்திகழ் வெண்பாப் பாடுநர் யாவரும்
இருநான்கு ஏழ்ஏழ் இருநான் காமெனக்
கன்னல் முப்பதும் எண்ணினர் இனிதே.

## அரிபிறப்பு

அரிபிறப்பு என்பது மீன், ஆமை, பன்றி, நரசிம்மம் வாமனன், பரசுராமன், ஸ்ரீராமன், பலராமன், கிருஷ்ணன், கற்கி என்ற திருமாலின் பத்து அவதாரங்களையும் பரவிப் பாட்டுடைத் தலைவனைக் காக்க வேண்டும் என்று சொல்லி, அவதாரத்துக்கு ஒரு பாடலாகப் பத்து ஆசிரிய விருத்தத்தால் பாடும் இனமாகும். இதனை வெண்பாப்

பாட்டியலும், இலக்கண விளக்கப்பாட்டியலும் உற்பவ மாலை என்ற பெயரால் குறிக்கின்றன

(விதி) சேலே ஆமை ஏனம் சிங்கம்
கோல வாமனன் மூவகை இராமர்
கரியவன் கற்கி எனவரு கடவுளர்
புரிதரு தோற்றம் தெரிதரப் பரா அய்ப்
பாட்டுடைத் தலைவனைக் காக்க வேண்டி
இனமொழி நாட்டி அகவல் விருத்தம்
ஒருபது இயற்றுதல் ஆழியோன் பிறப்பே.

## அட்டமங்கலம்

அட்டமங்கலம் என்பது ஒவ்வொரு செய்யுளிலும் பாட்டுடைத் தலைவனைக் காக்கவேண்டும் என்று சொல்லி இறைவனை ஏத்தி எட்டுவகை ஆசிரிய விருத்தத்தால் பாடும் பிரபந்தமாகும்.

(விதி) ஒருவனைக் காக்க என்று இறைவனை ஏத்திய
எண்வகை அகவல் விருத்தம் புணர்த்தல்
நண்ணிய அட்டமங்கலம் என்ப

29. இல்லற வெள்ளை, மங்கல வெள்ளை இவற்றை விளக்கி இரண்டையும் ஒப்பிட்டு ஆராய்க.

## இல்லற வெள்ளை

இல்லற வெள்ளை என்பது பாட்டுடைத் தலைவன் இல்லாளோடு இருந்து இயற்றும் இல்லறத்தைச் சிறப்பித்து வண்ணப்பாவும் வெண்பாவும் கலந்து வருமாறு ஒன்பது பாக்களால் பாடும் இனமாகும். இதனை ஒரே ஒரு வெண் கலிப்பாவாலும் அல்லது ஒன்பது சந்தப்பாவாலும் அல்லது ஒன்பது வெண்பாவாலும் கூடப் பாடலாம்.

(விதி) கலைதரு வண்ணமும் வெள்ளையும் ஒன்பான்
நிலைபெறப் புணர்ப்பின் அஃது இல்லற வெள்ளை

## மங்கல வெள்ளை

மங்கல வெள்ளை என்பது மகளிரது கற்பைச் சிறப்பித்து வண்ணப்பாவும் வெண்பாவும் கலந்து வருமாறு ஒன்பது பாக்களால் பாடும் இனமாகும். இதனை ஒரே ஒரு வெண் கலிப்பாவாலும் அல்லது ஒன்பது சந்தப்பாவாலும் அல்லது ஒன்பது வெண்பாவாலும் கூடப்பாடலாம்.

(விதி) சந்தமும் வெள்ளையும் தருவன கற்புடை
மங்கல வெள்ளை வருவன ஒன்பான்.

இவ்விரண்டு இனமும் வண்ணப்பாவும் வெண்பாவும் கலந்து பாடப்பெறும்: ஒன்பது செய்யுட்களைப் பெற்று வரும். இவை இரண்டும் ஒற்றுமை. முன்னதில் இல்லறம் சிறப்பிக்கப்படும்; பின்னதில் கற்புச் சிறப்பிக்கப்படும், இது ஒன்றும் வேற்றுமை.

30. தாண்டகம், பதிகம் என்பவற்றின் இயல்புகளைப் புலப்படுத்துக?

## தாண்டகம்

தாண்டகம் என்பது அறுசீர் ஆசிரிய விருத்தத்தினாலாவது எண்சீர் ஆசிரிய விருத்தத்தினாலாவது மானிடர் அல்லது கடவுளரைப் புகழ்ந்து பாடும் பிரபந்தமாகும். இவற்றுள் அறுசீர் விருத்தத்தால் பாடுவது குறுந்தாண்டகம்எனப்படும்.

(எ-டு) திருமங்கை ஆழ்வார் பாடிய திருக்குறுந்தாண்டகம்.

எண்சீர் விருத்தத்தால் பாடுவது நெடுந்தாண்டகம் எனப்படும். (எ-டு) திருமங்கை ஆள்வார் பாடிய திருநெடுந்தாண்டகம். திருநாவுக்கரசர் பாடிய திருத்தாண்டகங்கள்.

இவ்வினத்தை 10, 20 அல்லது 30 என்ற செய்யுள் எண்ணிக்கையில் பாடவேண்டும்.

(விதி) மூவிரண்டேனும் இருநான்கேனும்
சீர்வகை நாட்டிச் செய்யுளின் ஆடவர்

கடவுளர்ப் புகழ்வன தாண்டகம்; அவற்றுள் அறுசீர் குறியது ; நெடியது எண்சீராம்.

## பதிகம்

பதிகம் என்பது ஆசிரியத்துறை, ஆசிரியவிருத்தம், கலி விருத்தம் என்பவற்றை நான்கடிச் செய்யுட்களாக வைத்தேனும் எட்டடியாய் நீண்ட வெண்பாக்களை வைத்தேனும் பத்து அல்லது இருபது என்ற எண்ணிக்கையில் பாடும் இன மாகும் (எ-டு) சம்பந்தர், அப்பர், சுந்தரர் பாடிய தேவாரப் பதிகங்கள்.

(விதி) ஆசிரி யத்துறை அதனது விருத்தம்
கலியின் விருத்தம் அவற்றின் நான்கடி
எட்டின் காறும் உயர்ந்த வெண்பா
மிசை வைத்து ஈரைந்து நாலைந் தென்னப்
பாட்டுவரத் தொடுப்பது பதிகம் ஆகும்.

81. தாண்டகத்தின் இலக்கணம் எழுதுக (79 Apl)

விடை : 30-னுள் காண்க.

32. மெய்க்கீர்த்தி, ஆற்றுப்படை பற்றி நீவிர் அறிவன யாவை ? (80 Sep)

## மெய்க் கீர்த்தி

மெய்க்கீர்த்தி என்பது ஒவ்வொரு அடியிலும் நான்கு சீர் வரப்பெற்றும், இரண்டிரண்டடியாக எதுகை முதலிய தொடை பெற்றும், தொடக்கத்தில் வேந்தனது உண்மை யான புகழை எடுத்துரைத்தும், இறுதியில் அவனது வர லாற்றைக் கூறியும், அதன் பின் அவனது மனைவியர்கள் இன்னின்னார் என்று சொல்லியும், அவர்களோடு வாழ்க என வாழ்த்தியும் அதன் பின் வேந்தனது இயற் பெயர் ஆட்சி யாண்டு என்பவற்றைக் கூறியும் அமைக்கின்ற பிரபந்த

மாகும். (எ-டு) "திருமகள் போலப்பெருநிலச் செல்வியும்" எனத் தொடங்கும் முதலாம் இராஜராஜ சோழனது மெய்க் கீர்த்தி முதலியன.

[விதி] சீர் நான் காகி இரண்டடித் தொடையாய்
வேந்தன் மெய்ப்புகழ் எல்லாம் சொல்லியும்
அந்தத் தவன் வர லாறு சொல்லியும்
அவளுடன் வாழ்கெனச் சொல்லியும் மற்றவன்
இயற் பெயர்ப் பின்னர்ச் சிறக்க யாண்டெனத்
திறப்பட உரைப்பது சீர்மெய்க் கீர்த்தி

## ஆற்றுப் படை

ஆற்றுப் படை என்பது ஒரு வேந்தனிடம், பரிசில் பெற்று மீளும் இரவலன் வெயில் கொளுத்தும் காட்டுவழியில் வறுமை யோடு எதிர்ப்பட்ட புலவர், பாணர், பொருநர், விறலியர், கூத்தர் என் போரில் எவரையேனும் ஒருவரைக் கண்டு, தனக்கு பரிசில் தந்த, வள்ளலின் நாடு, ஊர், பெயர், கொடை முதலியவற்றைப் புகழ்ந்து கூறி நீயும் அங்கே செல்களென்று ஆற்றுப் படுத்துவதாக பாடும் பிரபந்த மாகும். இவற்றுள் புலவராற்றுப் படையானது மக்களுள் ஒருவரிடத்தே ஆற்றுப் படுத்துவதோ டன்றித் தெய்வத் திடத்தே ஆற்றுப் படுத்துவதாகவும் பாடப்பெறும்,

ஒரு புலவன் மற்றோர் புலவனை ஆற்றுப் படுத்துவது புலவராற்றுப்படையாகும். (எ—டு) திருமுருகாற்றுப் படை என்னும் புலவராற்றுப் படை. இது தெய்வத்திடம் ஆற்றுப் படுத்தியது. ஒரு பாணன் மற்றோர் பாணனை ஆற்றுப் படுத்துவது பாணாற்றுப் படையாகும். (எ—டு) சிறுபாணாற் றுப் படை, பெரும்பாணாற்றுப்படை. ஒரு பொருநன் மற் றோர் பொருநனை ஆற்றுப் படுத்துவது பொருநராற்றுப் படையாகும் (எ—டு) பத்துப் பாட்டில் இரண்டாம் பாட்டா கிய பொருநராற்றுப்படை ஒரு விறலி மற்றோர் விறலியை ஆற்றுப் படுத்துவது விறலியாற்றுப்படையாகும். (எ—டு) புறநானூற்றில் 103-ம் செய்யுள் ஒரு கூத்தன் மற்றோர் கூத்தனை ஆற்றுப் படுத்துவது கூத்தராற்றுப் படையாகும். (எ—டு) மலைபடுகடாம் ஆகிய கூத்தராற்றுப் படை.

(விதி)' புரவலன் பரிசில் கொண்டு பூண்ட
இரவலன் வெயில் தெறும் இருங்கா னத்திடை
வறுமை யுடன்வருஉம் புலவர் பாணர்
பொருநர் விறலியர் கூத்தர்க்கண்டப்
புரவலன் நாடூர் பெயர்கொடை பாரா அய்
ஆங்கு நீ செல்கென விடுப்பதாற் றுப்படை

33 · செருக்கள வழி, செருக்கள வஞ்சி இவற்றின் இலக்கணம் எழுதி ஒப்பிட்டு ஆராய்க.

## *செருக்கள வழி*

செருக்கள வழி என்பது பாட்டுடைத் தலைவன் போர்க் களத்தில் நிலை நாட்டிய புகழைப் போர்க்களத் தோடு புனைந்து கூறுமாறு நேரிசை, இன்னிசை, பஃறொடை வெண் பாக்களால் பாடும் இனமாகும். (எ—டு) கள வழி நாற்பது.

(விதி) தலைவன் செய்த நிலைபெறு புகழ்புனை
நேரிசை வெண்பா மறக்கள வழியே

(செருக்கள வழி எனினும் மறக்களவழி எனினும் ஒன்றே இது அடைமொழியின்றிக் கள வழி என்றும் கூறப்படும்.)

## *செருக்கள வஞ்சி*

செருக்கள வஞ்சி என்பது மன்னனின் செருக்களச் சிறப்பைப் பத்து விருத்தப் பாக்களால் பாடும் இனமாகும்.

(விதி) விருத்தவகை பத்தான் விளம்பும் அதனை
செருக்களம் எனவே செப்பினர் புலவர்

இவ்விரண்டு இனமும் செருக்களத்தைச் சிறப்பித்துக் கூறும் முறையில் ஒற்றுமையுடையன. செருக்கள வழி நேரிசை இன்னிசை பஃறொடை வெண்பாக்களால் பாடும் முறையிலும் செருக்கள வஞ்சி விருத்தத்தால் பாடும் முறை யிலும் வேற்றுமையுடையன

34. மறக்கள வஞ்சி செருக்கள வஞ்சி, பணைமுலைப் பத்து-நயனப் பத்து, ஊழத்திப்பாட்டு தறத்திப்பாட்டு

இவற்றின் இலக்கணமும் கூறி ஒற்றுமை வேற்றுமைகளையும் புலப் படுத்துக.

## மறக்கள வஞ்சி-செருக்கள வஞ்சி

மறக்கள வஞ்சி என்பது மன்னனின் மறக்களச் சிறப்பை வஞ்சிப்பாவால் பாடும் இனமாகும் அங்ஙனம் பாடும் போது அந்த வஞ்சிப்பாவில் குறளடியும், சிந்தடியும் மயங்குதலோடு அளவடியாகிய ஆசிரிய அடியும் மயங்கி வர வேண்டும்.

(விதி) குறள் சிந்து, அளவடி அகவல் அடிவிராய்
வஞ்சிச் செய்யுளின் மன்னர் மறக்களம்
எஞ்சா துரைப்பது மறக்கள வஞ்சி

செருக்கள வஞ்சி : விடை 33-னுள் காண்க.

இவ்விரண்டு இனமும் களச்சிறப்பைக் கூறுவதில் ஒற்றுமையுடையன ; மறக்கள வஞ்சி வஞ்சிப் பாவாலும், செருக்கள வஞ்சி விருத்தப் பாவாலும் பாடுவதில் வேற்றுமையுடையன.

## பணைமுலைப் பத்து-நயனப் பத்து

பணைமுலைப் பத்து என்பது தலைவியின் முலைகளைத் தலைவன் சிறப்பித்துக் கூறும் கூற்றாய்ப் பத்து ஆசிரிய விருத்தத்தால் பாடும் இனமாகும். நயனப் பத்து என்பது தலைவியின் கண்களைத் தலைவன் சிறப்பித்துக் கூறும் கூற்றாய்ப் பத்து ஆசிரிய விருத்தத்தால் பாடும் இனமாகும்.

(விதி) பணைமுலை, நயனம் பாங்காம் அகவல்
விருத்தம் பத்தென விளம்பினர் புலவர்

இவ்விரண்டு இனங்களும் பத்து ஆசிரிய விருத்தங்களால் பாடுவதில் ஒற்றுமையுடையன ; பணைமுலைப்பத்து முலையைச் சிறப்பித்தலிலும் நயனப் பத்து கண்ணைச் சிறப்பித்தலிலும் வேற்றுமையுடையன.

## உழத்திப் பாட்டு-குறத்திப் பாட்டு

உழத்திப்பாட்டு என்பது மூதற்கண் வேந்தன் பெயரைக் கூறி அவன் வாழ்க என்று வாழ்த்தி அதன் பின் வயலிற் செய்யும் தொழில் யாவும் உழத்தி ஒருங்கே உணர்த்தாள் என்று பத்துப் பாடல்களால் பாடும் இனமாகும்.

(விதி) புரவலற் கூறி அவன்வா ழியவென்று
அகல்வயல் தொழிலை ஒருமை உணர்ந்தனள்
எனவரும் ஈரைந்து உழத்திப் பாட்டே

குறத்திப் பாட்டு என்பது குறத்தி ஒருத்தி இறப்பு நிகழ்வு எதிர்வு என்னும் மூக்காலங்களையும் தனது திறமை தோன்றக் கூறுங் கூற்றாகப் பத்துப் பாடல்களால் பாடும் இனமாகும்.

(விதி) இறப்பு நிகழ்வெதிர்வு என்னு முக்காலமும்
திறப்பட உரைப்பது குறத்திப் பாட்டே.

இவ்விரண்டு இனங்களும் பத்துப் பாடல்களால் பாடுவதில் ஒற்றுமையுடையன; உழத்திப் பாட்டு உழத்தியின் சிறப்பைப் பிறர் கூற்றாகக் கூறுவதிலும் குறத்திப் பாட்டு முக்கால நிகழ்ச்சிகளைக் குறத்தி கூற்றாகக் கூறுவதிலும் வேற்றுமையுடையன

35. மருட்பா என்ற இனத்தை விளக்குக.

மருட்பா என்பது புறநிலை வாழ்த்து, வாயுறை வாழ்த்து செவியறிவுறூஉ என மூன்று வகைப்படும். அவற்றுள் புறநிலை வாழ்த்து என்பது வழிபடு தெய்வம் நின்னைப் புறங்காக்கப் பழியற்ற செல்வத்தோடு பரம்பரை பரம்பரையாகச் சிறந்து நீடு வாழ்மின் என்று வாழ்த்துவதாக மருட்பாவால் பாடும் இனமாகும்.

வாயுறை வாழ்த்து என்பது முன்னே கசந்து பின்னே நலம் செய்யும் வேம்பும் கடுவும் ஆகிய மருந்துகளைப் போல எம் சொற்களும் தடையின்றிப் பின்னே நன்மை செய்யும் என்று மருட்பாவால் பாடும் இனமாகும்.

செவியறிவுறூஉ என்பது செறுக்குற்றுச் சினந்து பொங்காமல் பெரியோர் நடுவே அடங்கி நடத்தல் கடமையாகும் என்று மருட்பாவால் பாடும் இனமாகும்

36. பாதாதியின் விளக்கம் வரைக. (79 Apl)

பாதாதி என்பது 1 உள்ளங்கால் 2 கால்நகம் 3. கால்விரல் 4. புறவடி 5. பரடு 6. கழல் 7. கணைக்கால் 8. முழங்கால் 9. துடை 10. அல்குல் 11. கொப்பூழ் 12, வயிறு 13. வயிற்றின் கோடு 14. இடுப்பு 15 மார்பின் மயிரொழுங்கு 16. முலை 17. கைநகம் 18. கைவிரல் 19. உள்ளங்கை 20. முன்கை 21. தோள் 22. கழுத்து 23, முகம் 24. கன்னம் 25. காது 26. செவ்வாய் 27. பல் 28. மூக்கு 29 கண் 30. புருவம் 31. நெற்றி 32. கூந்தல் என்ற முப்பத்திரண்டு உறுப்புக்களையும் சிறப்பித்தும் பாதகம் முதலாகக் கேசம் ஈறுக வைத்துப் பாடும் இனமாகும். இதனைப் பாதாதி கேசம் என்றும் கூறுவர்.

இனி இம் முப்பத்திரண்டு உறுப்புக்களையும் கேசம் முதலாகப் பாதம் ஈறுக வைத்துப் பாடுவது கேசாதி அல்லது கேசாதி பாதம் எனப்படும்.

இவ்விரண்டு இனங்களும் பெரும்பாலும் கலிவெண்பாவால் பாடப்பெறும்; சிறுபான்மை பிற பாக்களாலும் பாடப்பெறும், மக்களைப் பாடும் போது பாதாதியாகவும் கடவுளைப் பாடும்போது கேசாதியாகவும் பாடுதல் மரபாகும்.

37 பாதாதி. பதிகம், தாண்டகம், அரிபிறப்பு என்றின் இலக்கணம் எழுதுக (81 Apl.)

விடை: 36, 30; 28 னுள் காண்க

38 ஒருபா ஒருபஃது — இருபா இருபஃது இலக்கணம் எழுதி ஒற்றுமை வேற்றுமையும் குறிப்பிடுக.

ஒருபா ஒருபஃது என்பது ஏதேனும் ஒருபொருள் பற்றி வெண்பாவினால் ஆவது ஆசிரியத்தினுலாவது பத்து

...யால் அந்தாதியாகப் பாடும் இனமாகும். இனிக் கலித்துறையினாலும் அங்ஙனம் பாடலாம் என்று வெண்பாப் பாட்டியலும் இலக்கண விளக்கப் பாட்டியலும் கூறுகின்றன.

(விதி) வெள்ளை ஆதல் அகவல் ஆதல்
தள்ளா ஒருபஃது ஒருபா ஒருபஃது
இருபா இருபஃது: விடை 17-னுள் காண்க.

இவ்விரண்டு இனங்களும் அந்தாதியாக அமைவதிலும், வெண்பா அகவல் என்ற பாடல்களால் பாடப்படுவதிலும் ஒற்றுமையுடையன; ஒருபா ஒருபஃது வெண்பா அகவல் என்ற இரண்டில் ஏதேனும் ஒன்ருக மட்டும் பாடப்படுவதிலும் இருபா இருபஃது வெண்பா அகவல் என்ற இரண்டையும் வைத்துப் பாடப்படுவதிலும் வேற்றுமையுடையன மற்றும் முன்னது பத்துப் பாடல் பெறுவதிலும் பின்னது இருபது பாடல் பெறுவதிலும் வேற்றுமையுடையன.

39. கோவை கணக்கு, தொடர் நிலைச்செய்யுள் என்பவற்றை விளக்குக.

கோவை

கோவை என்பது ஐந்திணைகளும் திரியாமல் அகப் பொருளைத் தழுவிக் களவு கற்பு என்னும் இரண்டு கைகோளினும் பொருந்திய கிளவிகளின் பேரில் 400 கட்டளைக் கலித்துறையால் பாடும் இனமாகும். (கிளவி—துறை) (எ—டு) திருச்சிற்றம்பலக் கோவையார்.

இனி இவ்வினத்தை 400க்கு மேற்பட்ட செய்யுட்களாலும் சிலர் பாடியுள்ளனர். (எ—டு) தஞ்சைவாணன் கோவை (425 செய்யுட்கள்); சீகாழிக்கோவை (531 செய்யுட்கள்)

இனி ஏதேனும் ஒரு துறையின் மீது மட்டும் பல செய்யுட்கள் பாடினுல் அது ஒருதுறைக் கோவை எனப்படும் (எ—டு) நாணிக்கண் புதைத்தல் என்ற ஒருதுறை மீது பாடப்பட்ட ஒரு துறைக் கோவை. (400 செய்யுட்கள்)

(விதி) கோவை என்பது கூறுங் காலை
மேவிய களவு கற்பெனுங் கிளவி

ஐந்திணை திரியா அகப்பொருள் தழீஇ நானூ
முந்திய கலித்துறை நானூ றென்ப

## கணக்கு

கணக்கு என்பது மேற்கணக்கு, கீழ்க்கணக்கு என இரு வகைப்படும். அவற்றுள் மேற்கணக்கு என்பது அகவற்பா, கலிப்பா, பரிபாடல் என்பவற்றை 50 முதலாக 500 ஈறாகத் தொகுத்த தொகையாகும். (எ-டு) எட்டுத் தொகை நூல்கள். கீழ்க்கணக்கு என்பது வெண்பாக்களை 50 முதலாக 500 ஈறாகத் தொகுத்த தொகையாகும். (எ-டு) பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள்

(விதி) அகவலும் கலிப்பா வும்பரி பாடலும்
பதிற்றைந் தாதி பதிற்றைம்ப திரு
மிகுத்துடன் தொகுப்பன மேற்கணக் கெனவும்
வெள்ளைத் தொகையும் அவ்வகை எண்பெறின்
எள்ளறு கீழ்க்கணக் கெனவும் கொளலே

## தொடர்பு நிலைச் செய்யுள்

தொடர்புநிலைச் செய்யுள் என்பது விதையும் முளையும் கொடியும் ஒன்றேடொன்று காரண காரியத் தொடர்ச்சியாய் எழுவன போலத் தலைவனது வரலாறும் ஒன்றேடொன்று தொடர்பாய் அமையுமாறு வெண்பா, விருத்தம் அகவல், கொச்சகம் என்னும் செய்யுட்களால் பாடப்படுவதாகும். இதனைக் காப்பியம் என்றும் கூறுவர்.

இக்காப்பியம் தலை இடை கடை என மூன்று வகைப் படும். தலையாய காப்பியமானது ஐவகை மலைவுகளும் இன்றி அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கின் திறங்களைக் கூறும் மரபில் குறைவின்றி, வெற்றியும் அதற்குக் காரணமான மந்திராலோசனையும் முதலான அங்கங்கள் யாவும் பொருந்தி, நாடகத்துள் வரும் ஐவகைச் சந்திகளைப் போல வரலாற்றுப் பகுதிகள் ஒன்றேடொன்று தொடர்பு கொண்டு வரும். இது பெருங்காப்பியம் எனப்படும்.

...ய காப்பிய மானது அறம் முதலிய நான் கனுள் வீடு நீ...லாக அறம் பொருள் இன்பம் என்ற மூன்றை மட்டும் கூறுவதாக வரும். கடையாய காப்பியமானது அறம் பொருள் இன்பம் என்ற மூன்றில் ஒன்றை மட்டுமாவது இரண்டை மட்டுமாவது கூறுவதாக வரும். இடை கடையாகிய இரண்டும் சிறுகாப்பியம் எனப்படும்

40. இன்னிசைத் தொகை, விருத்த வகை அந்தாதித் தொகை, மருட்பா என்பவற்றில் அடங்கியுள்ள இனங்கள் யாவை? ஏதேனும் ஒருவகையில் அடங்கிய இனங்களை விளக்குக.

இன்னிசைத் தொகையில் ஊரின்னிசை, பெயரின்னிசை என இரண்டு இனங்கள் அடங்கி உள்ளன.

விருத்த வகையில் சிலை விருத்தம், பரி விருத்தம், கரி விருத்தம், வாள் விருத்தம், குடை விருத்தம், வேல் விருத்தம் செங்கோல் விருத்தம், நாட்டு விருத்தம் ஊர் விருத்தம் என ஒன்பது இனங்கள் அடங்கி உள்ளன.

அந்தாதித் தொகையில் வெண்பா அந்தாதி கலித்துறை அந்தாதி என இரண்டு இனங்கள் அடங்கி உள்ளன.

மருட்பா என்பதில் புறநிலை வாழ்த்து, வாயுறை வாழ்த்து, செவியறிவுறூஉ என மூன்று இனங்கள் அடங்கி உள்ளன.

விளக்கம் விடை 24, 35—னுள் காண்க.

41 இன்னிசைத் தொகை, அந்தாதித் தொகை என்பவற்றை விளக்குக.

### இன்னிசைத் தொகை.

இன்னிசைத் தொகை என்பது 90 அல்லது 70 இன்னிசை வெண்பாக்களால் பாடும் இனமாகும். இதில் ஊரின்னிசை பெயரின்னிசை என இரண்டு இனங்கள் அடங்கியுள்

ளன. ஊரின்னிசை என்பது பாட்டுடைத் தலைவனின் ஊ(ரைப்)
பற்றி 90 அல்லது 70 இன்னிசை வெண்பாக்களால் பாடும்
இனமாகும். பெயரின்னிசை என்பது பாட்டுடைத்தலைவனின்
பெயரைப்பற்றி 90 அல்லது 70 இன்னிசை வெண்பாக்களால்
பாடும் இனமாகும். (இவற்றை அந்தாதியாகப் பாட
வேண்டியதில்லை.)

(விதி) தொண்ணூ றேனும் எழுபதேனும்
இன்னிசை தொடுப்பின் இன்னிசைத்தொகையே

## அந்தாதித் தொகை

அந்தாதித் தொகை என்பது ஏதேனும் ஒரு பொருள் பற்றி வெண்பாவினாலாவது கலித்துறையினாலாவது அந்தாதியாகப் பாடும் இனமாகும். இதில் வெண்பா அந்தாதி, கலித்துறை அந்தாதி என இரண்டு இனங்கள் அடங்கியுள்ளன. வெண்பா அந்தாதி என்பது 100 நேரிசை வெண்பாக்களால் அந்தாதியாகப் பாடும் இனமாகும். கலித்துறை அந்தாதி என்பது 100 கட்டளைக் கலித்துறைகளால் அந்தாதியாகப் பாடும் இனமாகும். இவற்றை 30 முதலிய செய்யுட்களால் பாடுதலும் உண்டு.

(விதி) வெண்பாக் கலித்துறை வேண்டிய பொருளில்
பண்பாய் உரைப்பது அந்தாதித் தொகையே.

## ஆசிரியரின் பிற நூல்கள்

| | ரூ. பை. |
|---|---|
| தொல் எழுத்து, நச், இளம்: | 6—00 |
| தொல் சொல். சேனவரையம் | 6—00 |
| தொல் பொருள், இளம். | 7—50 |
| தொல் பொருள். நச். பேரா. | 6—00 |
| தொல் பாயிர விருத்தியும் சூத்திர விருத்தியும் | 3—00 |
| நன்னூல் காண்டிகை | 6—00 |
| நன்னூல் விருத்தி | 7—50 |
| அகப்பொருள் விளக்கம் | 4—00 |
| புறப்பொருள் வெண்பாமாலை | 6—00 |
| யாப்பருங்கலக் காரிகை | 4—00 |
| தண்டியலங்காரம் | 2—50 |
| மாறனலங்காரம் | 4—00 |
| வண்ணத்தியல்பு | 2—00 |
| கட்டுரைக்கனிகள் 1 & 2 | 3—00 |
| கல்வெட்டும் கல்வெட்டியலும் | 5—00 |
| கோயிற்கலைகள் | 5—00 |
| இலக்கியம் III | 6—00 |

-:எமது நூல்கள் கிடைக்குமிடங்கள்:-

செஞ்சுரி புக் ஹவுஸ் 238, செர்ரி ரோடு, சேலம்-1.
பழனியப்பா பிரதர்ஸ், திருச்சி 2.
வாசன்ஸ் புக் ஸ்டால், மதுரை.
ஜெயக்குமாரி ஸ்டோர்ஸ், கோர்ட் ரோடு, நாகர்கோவில்.
தா. ம. வெள்ளைவாரணம், திருப்பனந்தாள் P. O. தஞ்சை Dt

எல்லா பி லிட்., எம். ஏ. தேர்வு நூல்கள்,
வினா-விடைகள் கிடைக்கும்.

போன்: 842859

மோகன் பதிப்பகம்
4. பைகிராப்ட்ஸ் சாலை,
திருவல்லிக்கேணி :o- சென்னை.600 005.

அண்ணன் அச்சகம், சென்னை-24.